# பெரியவாளுக்குப் பிடித்த

ஏராளமாகத் தான தர்மம் செய்து புண்ணியம் சம்பாதிக்க எல்லோராலும் முடியாது. ஆயின் எளியோராயினும் செய்யக் கூடிய சில நல்ல காரியங்கள் இருக்கின்றன.

மேலெழுந்த வாரியாகப் பார்த்தால் ரொம்பச் சின்ன விஷயமாகத் தோன்றும். ஆனால் அவை லோக க்ஷேமத்துக்குப் பேருதவி செய்யும். அப்படிப்பட்ட சில "சின்ன" விஷயங்களைப் பற்றி - பெரியவாளுக்குப் பிடித்த 'சின்ன' விஷயங்களைப் பற்றி - ஸ்ரீ ஜெயேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய சுவாமிகள் சொல்கிறார்:

- ஜனங்கள் தெய்வ பக்தியை வளர்த்துக்கணும். தினமும் கொஞ்ச நேரமாவது ராம நாமம், சிவ நாமம்னு ஜபம் சொல்லணும். இது மாதிரி ஆத்ம சக்தியை வளர்த்துண்டா எல்லா க்ஷேமமும் கிடைக்கும்.

- எந்த ஜாதியானாலும் சரி, எந்த வகுப்பானாலும் சரி. கஷ்டம்னு வந்தால் பரஸ்பரம் ஒருவருக்கொருவர் முடிந்த அளவுக்கு சஹாயம் செய்யணும். பணக் கஷ்டமானாலும் சரி, மனக் கஷ்டமானாலும் சரி, வியாதியானாலும் சரி, நம்மால் முடிந்தவரை உதவி செய்யணும். வேறே ஒன்றுமில்லையானாலும் ஆறுதலான ஒரு வார்த்தை, உற்சாகமூட்டும் ஒரு சொல் கூட சமயத்தில் எவ்வளவோ சாதிக்கும்!

- பிடி அரிசி கொடுக்கறது... ஆஸ்பத்திரிலே இருக்கிறவாளுக்கு ஸ்வாமி பிரசாதம் கொடுத்து ஆறுதலா வார்த்தை சொல்றது.. பணக் கஷ்டம் உள்ளவாளுக்கு நம்மாலே முடிஞ்ச அளவுக்குப் பைசா கொடுத்து உதவறது... கல்யாணமாகாத பெண்கள் கல்யாண விஷயத்துலே முடிஞ்ச சஹாயம் செய்யறது இதெல்லாம் உதவி பெறுகிறவாளுக்கு மட்டுமில்லே, உதவி அளிக்கிறவாளுக்கும் மன நிறைவு தரும்.

- கல்யாணம் மற்றும் விசேஷ காலங்களில் பெண்கள் பட்டுப் புடவை அணிந்து ஆடம்பரமாக இருப்பது தேவையில்லாத விஷயம். பட்டுப் புடவையினால் நூற்றுக் கணக்கான பட்டுப் பூச்சிகள் உயிரைப் போக்கக் காரணமாகிறோம். உடை விஷயத்தில் ஆடம்பரம் தேவையில்லே. எளிமை போதுமானது.

- கல்யாணச் சமயங்களிலே ஆடம்பரம் கூடாது. சடங்குகளுக்குத்தான் முக்கியத்துவம் கொடுக்கணும். ஆடம்பரங்களைத் தவிர்க்கணும்.

- கல்யாணத்துக்குப் பொருத்தம் பார்க்கும்போது சகோத்ரம் இல்லாமல் மனசுக்குப் பிடிச்ச, ஜாதி, சம்பிரதாயத்துக்கு ஒத்திருந்தால் போதும். மூலம் ஆயில்யம்னு பார்த்துண்டு அதனாலே பெண்களோட திருமணத்துக்குத் தடை ஏற்படக் கூடாது. தோஷம்னு இருந்தா எல்லாத்துக்கும் பரிகாரம் இருக்கு. அந்தந்தப் பரிகாரத்தைச் செஞ்சுட்டுத்திருமணத்தைநடத்திக்கலாம்...

- பிள்ளையைப் பெத்த பெண்கள் முன் வந்து வரதட்சிணை வாங்க மாட்டேன் என்று உறுதி எடுத்தால்தான் வரதட்சிணைக் கொடுமைக்கு முடிவு கட்ட வழி பிறக்கும்.

- காப்பி சாப்பிடறது தவிர்க்கக் கூடிய விஷயம். அதனாலே பண விரயம்... உடல் நலத்துக்கு க்ஷீணம்... காப்பி அவசியமில்லாத அம்சம்.

- பண்டிகை காலங்களிலே வேண்டுமானால் விசேஷ உணவு சாப்பிடலாம். மத்தபடி அன்றாட உணவு விஷயத்தில் ஆடம்பரத்தைத் தவிர்த்து எளிமையாக உணவருந்த வேண்டும். உடை விஷயத்திலும் ஆடம்பரத்தையும், ஆபாசத்தையும் தவிர்க்க வேண்டும்.

- சினிமா, பத்திரிகைகள் என்பன பொழுது போக்குக்காக ஏற்பட்ட அம்சங்கள். அவற்றில் காணப்படுவது போன்று நிஜ வாழ்க்கையில் வாழ வேண்டும் என்று முயல்வது மிகவும் வருந்தத் தக்கதாகும். இம் மனப்பான்மையைத் தவிர்க்கவேண்டும்.

- முன்பு பரவிக் கிடந்த நல்லொழுக்கம் தற்போது சமுதாயத்தில் குறைந்துவிட்டது. நல்ல எண்ணங்கள்இருந்தால் நல்லசெயல்கள் தானாகப் பெருகும். ஆகையினால் மக்கள் மனத்தில் நல்ல சிந்தனை வளர்க்க நாம் உதவ வேண்டும். இதற்காக நல்ல நெறிகளுடன் வாழ்ந்த, வாழ்கின்ற மகான்களைப் பற்றியும், வீரம், நல்லொழுக்கம், தர்மம் இவற்றை வளர்க்கும் கதைகளையும் மக்களிடையே சொல்லிக் கொண்டே இருக்கலாம்.

- நாயகன்

# "சிறிய" விஷயங்கள்!



# பெரியவாளுடன் ஒருநாள்





⌘ சங்கர மடத்தின் தோற்றம்

⌘ தீர்த்தஸ்நானம் செய்யச் செல்கிறார் பெரியவாள்.

**வை**காசி மாதம் அனுஷ நட்சத்திரம் வரும் தினமான மே மாதம் 19ம் தேதியன்று ஜகத்குரு ஸ்ரீ காஞ்சி காமகோடி சந்திர சேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சாரிய சுவாமி களுக்கு 88 வயது பூர்த்தியாகிறது. பெரிய வாளுடைய ஆசீர்வாதத்தைப் பெற்று அதை யும் அவருடைய சன்னிதானத்தில் கிடைக் கப்பெறும் பேரானந்தத்தையும் லட்சக் கணக்கான 'கல்கி' வாசகர்களுடன் பகிர்ந்து கொள்ளலாம் என்கிற உத்தேசத்துடன் அவர் தற்போது தங்கியிருக்கும் சதாராவுக்குப் பயணமானேன்.

சென்னையிலிருந்து பூனாவுக்குப் போய், அங்கிருந்து பஸ்ஸில் சதாராவுக்குப் பயணப் படவேண்டும். பூனாவிலிருந்து சதாரா சுமார் 125 கிலோ மீட்டர் உள்ளது. மூன்று மணி நேரப் பயணம்.

பாதை பெரும்பாலும் மலைமேல் உள் ளது. வளைந்து, வளைந்து ஏறி இறங்கி, செல்கிறது. நடுவே நீண்டதான ஓர் குகைக்குள்ளேயும் செல்கிறது. ஆழ்ந்த பள் ளத்தாக்கில் பரந்து கிடக்கும் அற்புதமான இயற்கைக் காட்சிகள் மனத்தைக் கொள்ளை கொண்டு பயணத்தை மறக்க முடியாத தாக ஆக்கிவிடுகின்றன.

சா—தாரா என்பது சதாரா ஆனதாம். சப்த நட்சத்திர மண்டலத்தைப் போல் ஏழு கோட்டைகளைச் சுற்றி அமைத்துக் கொண்டு மாவீரன் சிவாஜி இங்கு ஆட்சி புரிந்தான்.

சின்ன ஊர்தான். ஊருக்கு நடு நாயக மாக விளங்குகிறது சிவாஜி சிலையுடனான ஒரு பூங்கா. சதாராவை நாடி வரும் பயணி களுக்கு 'ரஜதாத்ரி' ஹோட்டல் உதவு கிறது. ரயில் நிலையமும் உண்டு. ஆனால் அது ஊரிலிருந்து சுமார் ஆறு, ஏழு கிலோ மீட்டர் தள்ளி அமைந்துள்ளது. ரயில் நிலையம் செல்லும் வழியில் குறுக்கிடுகிறது கிருஷ்ணா நதி.

மாவீரன் சிவாஜிக்குரிய காவி நிறக் கொடி களைப் பறக்க விட்டுக் கொண்டிருக்கும் ஆட்டோக்கள் நம்மை ஸ்வாமிகள் தங்கி யிருக்கும் 'சங்கேஸ்வர' மடத்துக்கு அழைத் துச் செல்லக் காத்துக் கிடக்கின்றன. ஐந்து நிமிஷத்தில் சென்று விடுகிறோம். வழியில் ஒரு மலை மீது சிவாஜி வழிபட்ட ஜெய் பவானி ஆலயம் நம் கண்களில் படுகிறது.



ஆயிரம் லிங்கங்கள் அடங்கிய சிவலிங்கம்

'ஸ்ரீமத் ஜகத்குரு ஸ்ரீமதாத்ய சங்கராச்சார்ய மட்' என்கிற பெயர்ப் பலகையுடன் சங்கர மடம் நம்மை வரவேற்கிறது.

குறுகிய வாசல், செங்குத்தான படிகள் படிகளேறி நேராகச் சென்று இடது புறம் மறுபடி படியேறி வலது புறம் திரும்பினால் பிரும்மாண்டமான ஒரு சிவலிங்கம் நம்மைப் பக்திப் பரவசத்தில் ஆழ்த்துகிறது. ஆயிரம் சிவலிங்கங்கள் அடங்கிய லிங்கமாம் அது! பெரியவாளால் காஞ்சிபுரத்தினின்று வரவழைக்கப்பட்டதாம். விரைவில் அலஹாபாத்தில் பிரதிஷ்டை செய்யப்படவிருக்கிறதாம்.

ஆழ்ந்து வேத பாராயணம் செய்து கொண்டிருக்கிறான் ஒரு சிறுவன். மராட்டியப் பெண்கள் மலர்கள்கொண்டு சிவலிங்கத்தை வழிபட்டுக் கொண்டிருக்கின்றனர்.

கற்றிலுமாக மலைத் தொடர்கள் பரந்து கிடக்க அடிவாரத்தில் அமைந்திருக்கும் சங்கரமடத்தை நெருங்கும்போதே தெய்வீக உணர்வு நம்மைச் சூழ்ந்து கொள்கிறது.



சங்கர மடத்தின் வெளிவாசல்

வலப்புறம் அமைந்துள்ள சிறிய அறையில் அருள் வழியும் மந்தஹாஸப் புன்னகையுடன் வீற்றிருக்கிறார் ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதி ஜயேந்திர சரஸ்வதி சங்கராச்சாரிய சுவாமிகள்.

அவரது ஆசிர்வாதத்துடன் சங்கர மடத்தின் உட் பிராகாரத்துக்குள் நுழைகிறோம். கர்ப்பக் கிருகத்தில் ஆதி சங்கரின் அருள் உருவம்.

சன்னிதிக்கு இடப் பக்கமாகச் சிறு அறை. கம்பி போட்ட கதவு மூடியிருக்க, அச் சிறு அறையின் உள்ளே தம்மை அடக்கிக்கொண்டு இருக்கிறார் பெரியவாள். உலக மக்களின் க்ஷேமத்தையே மூச்சாகக் கொண்டு, பக்தி நெறி பரப்பி வரும் மானுடத் தெய்வமான ஜகத்குரு ஸ்ரீ காஞ்சி காமகோடி சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய சுவாமிகளின் தரிசனம் பெறுகிறோம்.

சாந்தமும் தெய்வீகப் பேரொளியும் பின்னிக் கிடக்கும் முகம். பக்த கோடிகளை ஆகர்ஷிக்கும் கம்பீர நோக்கு. தளர்ந்த பழமாய், காவி உடை தரித்து வீற்றிருக்கும் பெரியவாளின் திருத் தோற்றம் மெய்சிலிர்ப்பை ஏற்படுத்துகிறது.

சாஷ்டாங்கமாய் நமஸ்கரித்து, பெயர் சொல்லி அனுக்கிரஹிக்க வேண்டுகிறோம். கையசைத்து ஆசிர்வதிக்கிறார்.

மகாராஷ்டிர ஜனங்களும், தமிழக, மற்றும் பல மொழி ஜனங்களும் தரிசிக்கின்றனர். பலருக்கும் வாய் திறந்து பேசாமல் கையசைத்து அனுக்கிரஹம் செய்கிறார்.

காஞ்சிகாமகோடிபீடாதிபதி ஸ்ரீ ஜயேந்திர சரஸ்வதி ஸ்வாமிகளை மறுபடி அடைந்து நமஸ்கரித்து

காஞ்சி காமகோடி பீடாதிபதி ஸ்ரீ ஜயேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய ஸ்வாமிகள்.

ஊர் நடுவில் சிவாஜி சிலை



சதாராவில் பெரியவாளின் அருள் வாழ்க்கை பற்றிக் கேட்கிறோம். பக்த கோடிகளின் மனமகிழ்ச்சி கருதி ஸ்ரீ ஜயேந்திர சரஸ்வதி ஸ்வாமிகள் உவந்து கூறுகிறார்:

''ஒவ்வொரு நாளும் ஸ்ரீ ஆசார்யாள் காலை நாலரை மணியிலேந்து ஐந்து மணிக்குள்ளாக எழுந்து எல்லா ஜனங்களுக்கும் விஸ்வரூப தரிசனம் கொடுக்கிறார். ஜனங்களெல்லாம் ஹாரத்தி எடுத்து, தரிசனம் செய்கிறார்கள். அப்புறம் நித்ய கடமை செய்யறதுக்குன்னு ஸ்வாமிகள் உள்ளே போயிடுவார். கொறஞ்ச பட்சம் ஒரு மணி நேரத்துக்குக் குறையாம அவரோட சொந்த அனுஷ்டானம், ஜபம் பண்ணிக்கிறார்.

''அப்புறமா வெளிலவந்து ஜனங்களுக்குத் தரிசனம் கொடுத்து அவாகிட்டே பேசுவார். சில நாள் மௌனமாவே இருப்பார். ஆனாலும் அவா சொல்றதைக் காது கொடுத்துக் கேட்டுப்பார். ஆசீர்வாதம் செய்வார்.

அவருக்குன்னு பூஜை ஒண்ணும் கிடையாது. எல்லா பூஜையையும் அவருக்கு அடுத்தபடியா ஸ்தானத்துக்கு வந்துள்ள ஜயேந்திர ஸ்வாமிகள் கிட்டே ஒப்படைச்சுட்டார். ஆனாலும் தமக்குள்ளாக மானசீகமா அனுஷ்டானமும் பூஜையும் செய்துக்கறது உண்டு. இந்த அனுஷ்டானமும் பூஜையும் ரகசியமாக் கிடையாது. ஜனங்க பாட்டுக்குத் தரிசனம் பண்ணிண்டு இருப்பா. அவர் பாட்டுக்கு மானசீகமா பூஜை பண்ணிண்டு இருப்பார்.

மகாராஷ்டிர ஜனங்க அவரைத் தரிசிக்க வந்த வண்ணம் இருப்பா. அவா பாட்டுக்கு வரிசையா வந்து ஸ்வாமிகளை நமஸ்காரம் பண்ணிட்டு ஈச்வரனு அவரைத் தரிசிச்சுட்டுப் போயிண்டே இருப்பா. தமிழ், தெலுங்கு தேசத்து ஜனங்கள் அப்படியில்லாமல் தங்கியிருந்து, தரிசனம் பண்ணிக் குடும்ப விஷயங்களை, வியாகூலங்களை ஸ்வாமிகள் கிட்டே சொல்லிண்டு அவரோட அனுக்கிரஹத்தையும், ஆசீர்வாதத்தையும் பெற்றுண்டுதான் போவா.

ஸ்வாமிகள் அநேக நாள்கள்லே நன்னு சாதாரணமா பேசுவார். எல்லா ஜனங்க கிட்டேயும் எல்லா பாஷையிலேயும் பேசுவார். சம்ஸ்கிருத பாடசாலைலேர்ந்து அங்கே படிக்கிறவாளை வரவழைச்சு சாஸ்திர சம்பந்தமா விசாரணை யெல்லாம் செய்வார். வெளிலேர்ந்தும் பண்டிதர் எல்லாம் வருவதுண்டு. அவா கிட்டேயும் பேசுவார். ஆனா, மடத்து சம்பந்தமாகவோ, அரசியல் சம்பந்தமாகவோ மத்த விதமான பேச்சோ கிடையாது. சாஸ்திரம், விசாரங்கள், அனுஷ்டானம், ஜனங்கள் ஆசீர்வாதம்.... ஆக இவைகள்தான்.

யாராவது வந்து நாட்டு நடவடிக்கை பத்திச் சொல்லுவார், கேட்டுப்பார், ஏதாவது ஒன்றிரண்டு சொல்லுவார். மத்தபடி ஸ்தானத்துலே இருந்தப்போ இருந்த மாதிரி இப்போ அவர் விசேஷமா நாட்டு நடவடிக்கையைக் கவனிக்கிறது இல்லே. ஆனா, ஜனங்களா வந்து, 'இது இப்படி ஆயிடுத்து. இது இப்படி'ன்னு சொல்லுவா. கேட்டுப்பார். தகுந்த சமாதானம் சொல்லுவார். அவரை நாடி, பக்தா மட்டும்தான்

வரான்னு இல்லே. பக்தி உள்ளவாளும் வரா, எப்படி இருக்கார்னு பார்க்க வரவாளும் இருக்கா. அரசியல் நோக்கம் உள்ளவாளும் ஆசீர்வாதம் வாங்கிக்கணும்னு வரா. எல்லார்க்கும் ஒரேவிதமா நல்லபடியா க்ஷேமமா இருக்கணும்னு ஆசீர்வாதம்தான். ஸ்பெஷலா ஆசீர்வாதம்னு யாருக்கும் கெடையாது. 'ஸர்வே ஜனா: ஸுகினோ பவந்து' என்றதுக்குஏற்பலோக க்ஷேமம்தான் அவரோட நோக்கம். இதெல்லாம் ஆகிறதுக்கு மத்தியானம் நாலு மணிக்குக் குறையாம ஆயிடும்.

அதுக்கு அப்புறமா அவருக்குன்னு தோணினால் இலகுவான ஆகாரம். நெருப்பிலே வேகாத ஆகாரம்தான். பகவத் கீதையிலே சொன்னபடி நெருப்பைத் தொடாம இருக்கணும் சன்னியாசி என்பதற்கேற்ப நெருப்பிலே படாத ஆகாரமா சாப்பிடுவார். அதையும் சரீரம் தங்கறதுக்கு, பிராணன் நிற்கறதுக்கு எந்த அளவு தேவையோ அந்த அளவு மட்டுமே எடுத்துப்பார்.

இப்ப நாங்க இங்கே வந்ததற்கு அப்புறமா, ரெண்டு மாசமா ஸ்நானம் முடிச்சுட்டு, கிட்டக்க வந்து பூஜை முழுக்க இருக்கார். கோ பூஜை, ஹாரத்தி, சாயங்காலம் யானைக்குப் பூஜை ஆகியவற்றிலே கலந்துக்கறார். யானைக்குப் பழம், ஆகாரம் கொடுப்பார். ஆசார்யாளுடைய பாதுகை மடத்துலே வச்சிருக்கு. தரிசிப்பார். நாங்க வரதுக்கு முன்னாலே இதெல்லாம் கெடையாது. நாள் முழுக்க அந்த அறைக்குள்ளே தான்.

விசேஷ நாள்னா அமுங்கிக் குளிக்கணும்னு இருக்கிறதுனாலே, கிருஷ்ணா நதிக்குப் போய்க் குளிக்கிறது உண்டு. இல்லேன்னா இங்கே பக்கத்திலே மலே ஊற்று வரது. அங்கே போய் அமுங்கி ஸ்நானம் செய்வார்.

அவருக்கு ஸ்வாமி தரிசனத்தை விட தீர்த்த ஸ்நானம் முக்கியமானது. ஒரு ஊருக்குப் போனாக்கூட கோயிலுக்குன்னு போய்த் தரிசனம் செய்ய மாட்டார். ஒரு மூலேலே உட்கார்ந்துப்பார். ஜனங்கள் அவரைத் தரிசனம் பண்ணிண்டு போவா.''

'சதாராவைப் பெரியவாள் எதனால் தேர்ந்தெடுத்தார்' இன்னும் எவ்வளவு காலம் சதாராவில் தங்கியிருப்பார்?'' என்று ஸ்ரீ ஜயேந்திர ஸ்வாமிகளைக் கேட்கிறோம்.

''ஸ்வாமிகள் இப்படி ஊர் ஊரா வந்துண்டே இருக்கார். அவருக்கு சஜ்ஜன் காட் பார்க்கணும்னு விருப்பம். 'சஜ்ஜன் காட்' லேதான் மகான் ராமதாஸ் ஸ்வாமிகள் இருந்திருக்கார். அந்த இடத்தைப் பார்க்கணும்னு ரொம்ப நாளா சொல்லிண்டு இருந்தார். சமர்த்த ராமதாஸரைப் பத்தி நிறையப் படிச்சிருக்கார். அதனாலேதான் விருப்பம். சஜ்ஜன் காட்லே சமர்த்த ராமதாசர் கிட்டே ஆசீர்வாதம் வாங்கிண்டு தான் சிவாஜி சதாராவிலே கோட்டை கட்டிண்டு ஆண்டான். 'சஜ்ஜன் காட்'டுக்குப் போய் அதன் தொடர்ச்சியாத்தான் சதாரா வந்தார்... இங்கே வந்தப்புறம் அவருக்கு மனசுக்குப் புடிச்சப் போச்சு. ஒரு சங்கர மடம்... சமஸ்கிருத வேத பாடசாலைகள்... அமைதியான சூழ்நிலே... கிருஷ்ணா நதி.. இப்படின்னு எல்லாம் அவர் மனசுக்குப் பிடிச்சதா அமைஞ்சடவே தங்கிட்டார். இன்னும் கொஞ்ச நாளைக்கு இங்கேதான் இருப்பார்னு தோணறது.'' என்று ஒரு புன்னகையுடன் முடிக்கிறார்.

சற்று நேரத்தில் ஸ்ரீ ஜயேந்திர சரஸ்வதி ஸ்வாமிகள் பூஜையில் ஈடுபடுகிறார். பெரியவாள் வந்து சற்று ஒதுங்கினாற் போல் அமர்ந்து கொள்கிறார். ஹாரத்தி போன்ற சமயங்களில் எழுந்து வந்து மூக்குக் கண்ணாடி அணிந்து ஸ்வாமியை நமஸ்கரித்துக் கொள்கிறார். பூஜை மதியம் ஒரு மணிக்கு முடிய ஸ்வாமிகள் தமது அறைக்குத் திரும்பி விடுகிறார். மாலே யானைக்கு ஆகாரம் அளிக்கிறார்.

மறுநாள் ஏகாதசி ஆனதால் ஸ்வாமிகள் வெளிவந்து மலே ஊற்று அருகில் தீர்த்த ஸ்நானம் செய்வார் என்று அறிந்து காலேயில் மடத்துக்குப் போய்விடுகிறோம்.

விஸ்வரூப தரிசனம் முடிந்து, காலே அனுஷ்டானங்கள் முடிந்து, காலே சுமார் ஆறரை மணி அளவில் ஜனங்களை ஆசீர்வதிக்கத் தரிசனம் அளிக்கிறார்.

அன்று சற்றுத் தாராளமாகப் பேசுகிறார். மன அமைதி இழந்து வரும் பலருக்கு ஆறுதலளிக்கிறார்.

நாங்களும் ஸ்வாமிகளைத் தரிசித்து வந்த காரியம் கூறி, ஆசீர்வாதம் கேட்கிறோம்.

மனம் விட்டுப் பேசுகிறார். பலவித கேள்விகளைக் கேட்கிறார். அறிவுரைகள் வழங்குகிறார். ஆசீர்வதிக்கிறார்.

சுமார் இருபத்தைந்து நிமிடங்களுக்கு மேல் வளர்கிறது இந்தப் பேறு. எதிர்பாராது கிடைத்த பாக்கியத்தால் பக்தி பரவசத்தில் உடலும் உள்ளமும் முழுமையாய் மூழ்கிக் கிடக்கிறது.

சிவாஜி பரம்பரையைச் சார்ந்த மகாராணி ஸ்வாமிகளிடம் வந்து அனுக்கிரகம் பெற்றுக் கொள்கிறார். தொடர்ந்து மகாராஷ்டிர ஜனங்கள் பாமாலே பாடி ஸ்தோத்திரம் செய்கின்றனர்.

காலே சுமார் பத்து மணி அளவில் சிறு குழந்தைபோல் தளர்ந்த நடையாய்ப் பக்தர்கள் பின்தொடர நீராட வெளியே வருகிறார். வரும் வழியில் நமஸ்கரிப்பவர்களை விசாரித்து ஆசீர்வதிக்கிறார்.

மடாதிபதி ஸ்ரீ ஜயேந்திர சரஸ்வதி ஸ்வாமிகள் பூஜை செய்யப் பெரியவாள் கலந்துகொள்கிறார்.

பிரிய மனமின்றியே ஊர் திரும்பப் புறப்படுகிறோம். அறிவொளியும் அருளொளியும் பின்னிக் கிடக்கும் முகமும்... பக்த கோடிகளை ஆகர்ஷிக்கும் கம்பீர நோக்கும்... கனிரென்ற பேச்சும்... இடையிடையே சாந்தமாய்ச் சிந்திய புன்னகையும் திரும்பும் வழி முழுக்க என்னுள் முழுவதுமாய் நிறைந்து...

எழுதும்போது இன்னும் சிலிர்த்துப் போகிறது.

—நாயகன்

புகைப்படங்கள்: மன்னை மூர்த்தி



# நியூஸ் ஜூஸ்

— அனிதா

இரண்டு விதத்தில் இறவாப்புகழ் பெற்றவர் நர்கிஸ். சினிமா நட்சத்திரங்கள் பலர் பிரபலமாக இருக்கும்போது உற்சாகமாக இருப்பதையும் திடுமென மவுசு குறைந்ததும் இடிந்து போய் விடுவதையும் பார்க்கிறோம். நர்கிஸ் விதிவிலக்கு. சினிமாவில் பிரபலமாக இருந்தபோது அடக்கமாக இருந்தார். சினிமா புகழ் மங்கி மறைந்தபோது சோர்ந்து விடாமல் சமூகப் பணியாற்றுவதில் சுறுசுறுப்புக் காட்டினார். ஊனமுற்ற குழந்தைகளின் நல்வாழ்வுக்கு அவர் ஆற்றியுள்ள தொண்டு அவரது கலைத் தொண்டுக்கு நிகரானது.

● ● ●

விலை வாசி உயர்வால் பாதிக்கப்படுகிறவர்கள் மக்கள் மட்டுமல்ல, மக்கள் பிரதிநிதிகளும்தான். அதிலும் உத்தரப் பிரதேச எம். எல்.ஏ.க்கள் ரொம்பவும் பாதிக்கப்பட்டு விட்டார்கள் போலும்! அவர்கள் தங்களுக்குத் தாங்களே சம்பள உயர்வு தந்து கொண்டார்கள். ஐந்து சதம் பத்து சதம் அல்ல! நூறு சதம்! தவிர மற்ற சலுகைகளையும் தாராளமாகவே அதிகப்படுத்திக் கொண்டார்கள்! ஹூம், அதிர்ஷ்டசாலிகள்! ''ஏதோ கொஞ்சம் பார்த்துப் போட்டுக் கொடுங்க ஸார்'' என்று யாரையும் கெஞ்ச அவசியமின்றித் தங்களுக்குத் தாங்களே வாரி வழங்கிக் கொள்ளலாம்!

● ● ●

கறுப்புப் பணப் பத்திரம் — மாபெரும் வெற்றி — முதல் நாள் செய்தி. கறுப்புப் பணப் பத்திரம் மகத்தான தோல்வி!—மறு நாள் செய்தி! வரிகள் மேலும் உயரும்—நாளைய செய்தி?

● ● ●

சென்னையில் ஒரு பலத்த மழை அடித்தாலும் அடித்தது. சாலையில் குடிநீர் வடிகால் வாரியமும் மின் வாரியமும் தோண்டி விட்டு இலேசாக மண்ணைப் போட்டு மூடியிருந்த பகுதிகள் மீது கார் போனபோது பொசுக்கென்று அமுங்கி கார்களைச் சிக்க வைத்துக் கொண்டன. கோடம்பாக்கம் நெடுஞ்சாலையில் இப்படி ஒரு ஹெரால்ட் கார் கண்ணியில் சிக்கிக் கொண்டு பரிதாபமாக விழித்தது. இன்னும் எத்தனையோ. அமெரிக்காவாக இருந்தால் கார் சொந்தக்காரர் குடிநீர் வடிகால் வாரியம் மீது வழக்குத் தொடர்ந்திருப்பார்.

● ஆண்டுக்கொரு முறை சில மாதங்கள் நாடாளு மன்றம் தெற்கே நடக்க வேண்டும் என்று ஒரு யோசனை புறப்பட்டிருக்கிறது. எனக்குத் தெரிந்த ஒரு எம். பி.க்கு ரொம்பக் கோபம்! ''வடக்கு — தெற்கு என்று மட்டும் பேசுவானேன்? கிழக்கு, மேற்கு, தென்கிழக்கு, வடமேற்கு எல்லாம் என்ன பாபம் செய்தன? ஒரு ஆண்டு பாரீஸில் ஒரு ஆண்டு ஹாங்காங்கில், மற்றொரு ஆண்டு ஹாலிவுட்டில் என்று மாறி மாறி நாடாளு மன்றக் கூட்டத் தொடரை நடத்தலாமே!'' என்கிறார். அவர் சொல்வதிலும் அர்த்தமிருக்கிறது. நாடாளு மன்றம் பெங்களூரில் நடந்தாலும் செலவு என்னவோ எக்கச்சக்கமாக ஆகப் போகிறது; மக்கள் தான் கொடுத்து அழப் போகிறார்கள். ஹாங்காங்கில்தான் வைத்துக் கொள்ளலாமே? எம் பிக்களுக்கு ஜாலியாக இருக்கும்!

● ● ●

''ஆபத்தான புதிய மருந்துகள், அவை கண்டுபிடிக்கப்பட்ட நாட்டிலேயே தடை விதிக்கப்பட்டிருந்தாலும் பலவீனமான நாட்டு மக்களிடையே விற்பனையாகிப் பரிசோதிக்கப்படுகின்றன'' என்று ஜெனிவாவில் குற்றம் சாட்டியுள்ளார் நமது பிரதமர். இதில் உண்மை இருக்கிறது. மருந்து உற்பத்தியாளர்கள் பலர் இந்த அக்கிரமத்தைச் செய்கிறார்கள். ஆயின் அவர்களை மட்டுமே குறை சொல்லி என்ன பயன்? தனது மக்களின் ஆரோக்கியத்தைக் காக்கத் தெரியாமல் இதுபோன்ற பரிசோதனைகளை நிகழ்த்த அனுமதிக்கிற அரசின் கையாலாகாத்தனத்தையும் சேர்த்துத்தானே குறிப்பிட வேண்டும்? இந்திய அரசும் விதிவிலக்கல்லவே!

● ● ●

புதிய மருந்துகளைக் கண்டு பிடிப்பவர்கள் பேடண்ட் உரிமை பதிவு செய்து கொள்வதையும் எதிர்த்துப் பேசியிருக்கிறார் பிரதமர். ''வாழ்விலும் சாவிலும் லாப நோக்கு இருக்கலாமா?'' என்கிறார்.

இப்படிக் கேட்கும்போது பிரதமர், மிகப் பெரிய மருந்து தயாரிப்பு நிறுவனங்கள் ஆராய்ச்சிக்காகக் கோடி கோடியாகச் செலவழிப்பதை மறந்து விடுகிறார். பல கோடி செலவழித்துப் பல தயாரிப்புக்கள் நிராகரிக்கப்பட்ட பின், ஒரு மருந்து பயனுள்ளதாகக் கண்டு பிடிக்கப்படுகிறது. அதனை உற்பத்தி செய்து விநியோகிக்கும் கம்பெனி, தான் ஆராய்ச்சிகளுக்குச் செலவழித்த பணத்தைத் திரும்ப எடுக்க விரும்புவதில் வியப்பில்லை. வாழ்விலும் சாவிலும் கூட லாப நோக்கு இருந்த காரணத்தால்தான் மிகச் சிறந்த மருந்துகள் கண்டு பிடிக்கப்பட்டன. பிரதமரே குறிப்பிட்டபடி ஆப்பிரிக்காவிலும் ஆசியாவிலும் இந்த அற்புத மருந்துகள் காரணமாய் மரண விகிதம் வெகுவாகக் குறைந்தும் வருகிறது.

# ஏழாண்டு இல்வாழ்க்கை

முதல் ஆண் குழந்தை பிறந்த பிறகு இரண்டாவது ஆண் குழந்தையும் மூன்றுவது பெண் குழந்தையும் பிறந்தன. நான் கருத்தடை ஆபரேஷன் செய்து கொண்டேன். குழந்தைகள் நல்ல ஆரோக்கியத்துடன் இருக்கின்றன. என் கணவர் அலுவலகம் போகு முன் எனக்கு வீட்டு வேலையில் ஒத்தாசை செய்கிறார். அலுவலகம் முடிந்ததும் வீடு வந்து சேருகிறார். குழந்தைகளைக்கவனித்துக் கொள்கிறார். எனக்கு உடல் நலம் சரியில்லை என்றால் முன்னைவிட இப்போது பிரியமாகவும் நன்றாகவும் கவனித்துக்கொள்கிறார். நான் விரும்பும் எந்தப் பொருளையும் தட்டாமல் வாங்கித் தருகிறார். அவர் சக்திக்கு மீறிய அளவில் நான் எதையும் கேட்டதுமில்லை. எங்களுக்குள் எந்த ஒரு பிரச்னையும் கிடையாது. கடந்த ஆண்டுகளை விட இப்போது நான் மிகவும் சந்தோஷமாக இருக்கிறேன். எங்களிடையே காதல் உணர்வுடன் தோழமை உணர்வும் அதிகரித்து வருவதை உணர்கிறேன்.

—மீனாட்சி இராமசாமி





ஹென்ரி போர்டு விதவிதமான மாடல்களில் கார்களைத் தயாரித்தவர். அவரிடம் போய் ஒருவர், ''சந்தோஷமான மண வாழ்க்கைக்கு ஒரு வழி சொல்லுங்களேன்'' என்று கேட்டார்.

''ஒரே மாடலுடன் வாழ்க்கை நடத்துங்கள் போதும்'' என்றார் அவர்.

—ராமசாமி.

முன் பின் அறியாத ஓர் ஆணுடன் இணைந்து வாழ்க்கை நடத்தப்போவதைநினைக்கும்போதே 'த்ரில்லிங்'சாக இருந்தது அப்போது.

வெகு தொலைவு — புனாவுக்குப் போக நேர்ந்தது. சமைக்கவோ, அவரது வருமானத்துக்குள் செலவு செய்து மிச்சம் பிடிக்கவோ எனக்குத் தெரியாது.

என்னுடைய ஒவ்வொரு தவறையும் சுட்டிக் காட்டுவது தெரியாமலே என்னை உணர வைத்துத் திருத்துவதிலாகட்டும், என் திறமையின்மை மற்றவர்களிடம் கூறிப் பெருமைப்படுவதிலாகட்டும், என் மனத்துக்கு நிறைவளிக்கிறார்.

கோபம் வந்து ஓரிரு சமயம் சேர்ந்தாற்போல் இரண்டு மூன்று நாள் பேசாமல் மௌனமாகவே இருந்ததும் உண்டு. அதன் பிறகு தவறு என்று தெரிந்தாலும் ஒப்புக்கொள்ள என் வறட்டுக் கௌரவம் இடம் தராது. அப்போதும் என் தவறைச் சுட்டிக்காட்டி ''சரி, சரி, இதோடு விடு. டயரியில் எழுதி வைத்துக் கொள்வது போல் மனத்துள் எழுதி வைத்துக் கொண்டு இருக்காதே'' என்றுதான் கூறுவார்.

பிறந்தகத்து ஏக்கம் எனக்குத் தோன்றுவதை எப்படித்தான் புரிந்துகொள்வாரோ மனத்துக்கு ஆறுதலாய், பிறந்த வீட்டிலிருந்து கடிதம் வரும்படியாவது, அல்லது தம்பிமார்களோ, அப்பா அம்மாவோ புறப்பட்டு வரும்படியாவது செய்துவிடுவார். அவ்வப்போது என்னை ஊருக்கு அழைத்துச் செல்வதும் தவறாது.

வெளியே இருவரும் போகும்போது, எதிர்ப்படும் பெண்களைப் புகழ்ந்து எனது ரியாக்ஷன் எப்படி இருக்கிறது என்று பார்த்துச் சிரிப்பார்.

புகுந்த வீட்டினர் என்னைப் பற்றிக் குறை கூறும் சந்தர்ப்பம் நேர்ந்தபோது 'கடைசி வரை ஒன்றாய் இருக்கப் போகிறவர்கள் நாம் தான். அதை ஏன் பெரிதாய் எண்ணுகிறாய், விட்டுத் தள்ளு' என்பார்.

அன்புக் கணவர் அடிக்கடி கூறுவது: 'Love Conquers the world; Let us yield to Love'

—எஸ். மங்கை.



ருஷ்யாவில் கோஸ்யா தேசிய கானகப் பூங்காவில் கணவன் - மனைவி மரச் சிற்பங்களை ரசிக்கும் சுற்றுலாப் பயணிகள்



நான் நான் 'கோலி'!
இல்லை! நான் நான்!
நான் நான்டா 'பார்வர்ட்'!
இல்லை! நான் நான்!
இடைத் தேர்தல்
அந்தம்மா 'கோல்' போட்டுடப் போறாங்க! நான் விட மாட்டேன்!
நீ யார் அதைச் சொல்ல? நான் தான் 'கோல்' விழாமெ தடுக்கப் போகிறேன்!
எதிர்க் கட்சிகள்
என்னை விட்டா கதி இல்லை!

கவலைப் படாதீங்க! மேக்கப் போட்டு குறையை மறைச்சுடலாம்!

நான் ரெண்டு குழந்தைகளையும் ஒரே மாதிரி தாலாட்டறேன்!
மேற்கு வங்க அரசு
இ. காங்கிரஸ் மாநில அரசுகள்
மேற்கு வங்க அரசைக் கவிழ்ப்பதற்கு மத்திய அரசு முயற்சி செய்வதாக முதல்வர் ஜோதிபாசு கூறியுள்ளார்!

# தாய்க்குலத்தின் தவிப்பு!

ஜெனிவா சென்ற பிரதமர், தமது அரசின் குடும்பக் கட்டுப்பாடு கொள்கை தவறாகச் சித்திரிக்கப்பட்டது என்றும், ஆதாரமற்ற பிரசாரம் நடந்தது என்றும், இதனால் குடும்பக்கட்டுப்பாடு திட்டத்துக்கே கணக்கிலடங்கா அளவில் தீங்கு ஏற்பட்டது என்றும் கூறியுள்ளது நகைப்புக்கிடமளிக்கிறது.

நெருக்கடி நிலை பிரகடன காலத்தில் சஞ்சை காந்தி தலைமையில் குடும்பக் கட்டுப்பாடு திட்டம் அமல்படுத்தப்பட்ட விதம்தான் அந்தத் திட்டத்துக்கே கணக்கிட முடியாத அளவில் தீங்கு விளைவித்ததேயன்றி, அந்தக் கட்டாய அறுவைச் சிகிச்சைகளை எதிர்த்து நடந்த கிளர்ச்சியால் அல்லவே அல்ல.

சஞ்சை தலைமையில் நடந்த கட்டாய அறுவைச் சிகிச்சை முகாம்கள் காரணமாகத்தான் அந்தத் திட்டத்தின் மீதே மக்களுக்கு அளவிட முடியாத வெறுப்பு ஏற்பட்டு இன்று திட்டத்தின் பெயரையே குடும்ப நலத்திட்டம் என்று மாற்றும்படி ஆயிற்று. அகில உலகமும் அறிந்த இந்த விஷயத்தை ஒரு சர்வதேச அரங்கிலே திரித்துக் கூற பிரதமர் முற்பட்டது விசனத்துக்குரியது.

''ஸ்ரீமதி காந்தியின் பேச்சு ஊக்கமளிப்பதாய் இருந்தது; அவர் ஒரு பிரதமர் என்ற முறையில் மட்டுமன்றி ஒரு பெண்மணி என்ற முறையிலும் ஒரு தாய் என்ற முறையிலும் கூடப் பேசினார்'' என்று அந்த உலக அரங்கின் தலைவர் டாக்டர் எம்.வி. பரஸ்கேவா கூறியதில் உள்ள நையாண்டி பிரதமருக்குப் புரிந்ததோ இல்லையோ, அகில உலகுக்கும் புரிந்திருக்கும்.

இந்த ஓர் அம்சத்தை ஒதுக்கி விட்டால் உலக சுகாதாரக் கழகத்தில் பிரதமரின் பேச்சு குடும்பக்கட்டுப்பாடு என்ற அம்சத்தை மட்டும் பொறுத்த வரையில் பாராட்டத்தக்கதாகவே உள்ளது.

மக்கள் தொகை அதிகரித்ததை விட இந்தியாவில் உணவு உற்பத்தி அதிகரித்ததைப் பிரதமர் நியாயமான பெருமிதத்துடன் வெளியிட்டிருக்கிறார். குடும்பக்கட்டுப்பாடு திட்டத்தை அரசாங்கக் கொள்கையாகவே முதன் முதலில் ஏற்றுக் கொண்ட நாடுகளில் இந்தியாவும் ஒன்று எனக் குறிப்பிட்டார். இத்திட்டத்தால் சென்ற பத்து ஆண்டுகளில் சுமார் மூன்று கோடி பிறப்புக்கள் இந்தியாவில் தடுக்கப் பட்டுள்ளதாய்க் கணிக்கப்பட்டுள்ளதைத் தெரிவித்தார்.

ஜெனிவாவில் பிரதமர் பேசிய செய்தி வெளியான அதே நாளிதழில், பல்வேறு துறைகளைச் சேர்ந்த சுமார் 80 பிரமுகர்களின் ஒப்புதலுடன் வெளியான அறிக்கை, பாரதம் குடும்பக் கட்டுப்பாடு திட்டத்துக்கு முக்கியத்துவம் தரவேண்டும் என்றும் கட்சி வேறுபாடு இன்றி அனைவரும் இதற்கு ஒத்துழைக்க வேண்டும் என்றும் கோருகிறது.

மக்களின் வாழ்க்கைத்தரம் உயர்ந்தால் குடும்பக்கட்டுப்பாடு திட்டத்துக்கு ஆதரவு பெருகுமென்றும் குடும்பக்கட்டுப்பாடு திட்டம் அதிக ஆதரவு பெற்றால் மக்களின் வாழ்க்கைத்தரம் வேகமாக உயரும் என்றும் இருவிதமாகவும் கூறப்படுகிறது. இரண்டிலுமே உண்மை உண்டு.

எவ்வாறாயினும் டாக்டர்களும், அரசு அதிகாரிகளும், சமுதாய நலன் விரும்பும் அறிஞர்களும் நினைவில் கொள்ள வேண்டிய விஷயம் ஒன்று உண்டு: கருத்தடை முறைகளைப் பெண்கள் கையாளும்போது அவர்களுக்குப் பலவித துன்பங்கள் ஏற்படுகின்றன.

'பில்' எனப்படும் மாத்திரைகளை விழுங்குவதால் உடல் ஊதிப் போகிறது; வேறு பல உடல் உபாதைகளும் ஏற்படுகிறது. லூப் சாதனத்தைக் கருப்பையில் வைப்பதால் கருவுறுதல் தடுக்கப்படலாம்; ஆனால் பலருக்கு ரணமும் ரத்தப் போக்கும் ஏற்பட்டு கஷ்டப்படுகிறார்கள். கருத்தடைக்குப் பூசிக் கொள்கிற மருந்துகளை மீறிச் சில சமயம் கர்ப்பம் தரித்து விடும்போது பயன்படுத்தப்பட்ட மருந்து காரணமாய்ப் பிறக்கும் குழந்தை ஊனமுள்ளதாய் இருக்கிறது. இவ்வாறே கர்ப்பத்தைக் கலைக்கப் பயன்படுத்தப்படும் ஊசி மருந்துகளும் வாய் வழியே விழுங்கும்

1981 மே 17

துன்மதி வைகாசி 4

மலர்: 39 இதழ்: 42



கல்கி



தமிழ்த்திரு நாடு தன்னைப் பெற்ற எங்கள்
தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்

மருந்துகளும் பல சந்தாப்பங்களில் பயன் தராமல் போவதுடன், அந்த மருந்து காரணமாகவே, பிறக்கும் குழந்தை அங்கஹீனமானதாய் விளங்குகிறது. அபார்ஷன் எனப்படும் கருச்சிதைவு சஸ்திர சிகிச்சையோ ஆபத்துக்களை மட்டுமன்றி ஓர் உயிரைக் கொல்கிற பாவத்தையும் உள்ளடக்கியது. பெண்களுக்கான கருத்தடை சஸ்திர சிகிச்சை சிக்கலானது; சிரமமானது; வலி, வேதனை தவிர பல சமயங்களில் பெண்களுக்கு உடன் விளைவான கோளாறுகளை உண்டாக்குகிறது.

குடும்பக் கட்டுப்பாடு முறைகளிலேயே மிகவும் எளிமையானதும் உடன் விளைவுத் தொல்லைகள் அற்றதுமான முறைகள் ஆணுக்கு ஏற்பட்ட சஸ்திரசிகிச்சையும் கருத்தடை சாதனமும்தான்.

எனவே குடும்பக் கட்டுப்பாட்டைக் கணவன்மார்களிடம் அதிகமாகப் பிரசாரம் செய்து அவர்களைத் திட்டத்தை ஏற்கச் செய்வதே சாலச்சிறந்தது. பெண் இனத்தை மதிக்கின்ற, தற்குறியாக இல்லாத எந்தக் கணவனும் மனைவியின் உடலுக்கும் உள்ளத்துக்கும் தேவையற்ற கஷ்டங்களைத் தரமாட்டான்.

---

# "இது என்ன வேஷம்?"

பைங்காநாடு கிராமத்தில் பிறந்து முறையாக வேத அத்யயனம் செய்து ஸம்ஸ்கிருதம் பயின்று சிரோமணிப் பட்டம் பெற்று, பல ஆண்டுகள் ஆசிரியராகப் பணி புரிந்த என் வாழ்க்கையில் 1962ல் நடந்த நிகழ்ச்சி மறக்க முடியாத ஒன்று.

பெரியவாள் இளையாத்தங்குடிக்கு விஜயம் செய்தபோது பைங்காநாடு வாசிகளுடைய வேண்டுகோளுக்கிணங்க அந்தணர் வழியாகப் பட்டுக்கோட்டை செல்ல மனம் உவந்தார்கள்.

பெருமாள் கோவில் வாயிலில் அமைக்கப்பட்ட பந்தலில் பெரியவாளுக்கு ஸ்வாகத பத்திரிகை வாசித்தளிக்கவும், வரவேற்பு விழா நடத்தி அநுக்ரகம் பெறவும் மக்கள் திரளாகக் கூடியிருந்தார்கள். பெரியவாள் முன்னிலையில் ஸ்வாகதப் பத்திரிகை படிக்கத் தொடங்கினேன்.

''நிறுத்து'' என்ற அதட்டல். ''நீ படிக்க வேண்டாம்'' என்ற கட்டளை.

அருகில் நின்று கொண்டிருந்த முடிகொண்டான் ஸ்ரீநிவாச சாஸ்திரிகளை ஸ்வாகதப் பத்திரிகை படிக்கச் சொன்னார்கள்.

படித்து முடித்ததும், ''இதை எழுதியது யார்?'' என்று கேட்டார்கள். ''வெங்கட்ராமன்தான்'' என்று சாஸ்திரிகள் பய்யமாகத் தெரிவிக்க, ''அவன் எங்கே?'' என்று அதட்டல். கோவில் பிராகாரத்தில் மறைந்திருந்த என்னை இழுத்து வந்து பெரியவர் முன் நிறுத்த, கண்ணீர் விட்டபடி கைகூப்பிக் குற்றவாளிக் கூண்டில் நிற்பது போல் நின்றேன். ஸ்வாகதப் பத்திரிகையில் உள்ள சில சொற்களுக்கு விளக்கம் கேட்க நான் தயங்கியபடி பதிலளித்தேன்.



''நன்னா எழுதியிருக்கே. ஆனால் உனக்குப் பிரசாதம் இன்னிக்குக் கிடையாது'' என்று புன்முறுவல் தவழப் பெரியவாள் சொன்னார். கீழே குவிந்து கிடந்த ரோஜா இதழ்களை அள்ளி என் தலையில் போட்டார்.

''இது என்ன வேஷம்! வேதாத்யயனம் செய்து சாஸ்திரம் படித்த நீயுமா சிகை வைத்துக் கொள்ளாமல்...'' என்றவுடன், ''விடிந்தவுடன் கிராப்பை நீக்கிக் குடுமி வைத்துக் கொண்டு விடுகிறேன். பிழைக்கு மன்னிக்கவேண்டும்'' என்றுநாத் தழுதழுக்கக் கூறினேன். பெரியவாள் முகம் மலர்ந்தது.

''குடுமி வைத்துக் கொண்டு ஒழுங்கா புதுக்கோட்டை காம்பில் வந்து இதே ஸ்வாகதப் பத்திரிகையைப் படித்துவிட்டு பிரஸாதம் வாங்கிக்கொள்'' என்றார். ''இந்தப் பந்தலிலேயே 21 நாட்கள் ராமாயண உபந்யாசம் செய். ஸ்ரீராம நவமிவருகிறது'' என்று அன்புக் கட்டளையும் பிறந்தது.

வரவேற்பு முடிந்து பட்டுக்கோட்டை ரஸ்தாவுக்குச் செல்லும் மணற்பாதையில் சிகையின் பெருமையையும் பஞ்ச கச்சத்தின் மேன்மையையும் பற்றிப் பெரியவாள் செய்த உபதேசம் இன்று நினைத்தாலும் புல்லரிக்கிறது.

மறு வாரம் பெரியவாள் கட்டளைப்படி புதுக்கோட்டை சென்று ஸ்வாகதப் பத்திரிகையை மாபெரும் கூட்டத்தில் படித்தேன். மும்முறை படிக்கச் சொன்னார்கள். படித்தேன். மருக்கொழுந்து மாலையை என்மீது வீசினார்கள். அது சரியாக என் கழுத்தில் வந்து விழுந்தது. கிடைக்கக் கூடிய பாக்கியமா?

அவர்கள் கட்டளைப்படி ராமாயண உபந்யாசம் செய்யத் தொடங்கி இன்றுவரை 60க்குக் குறையாத உபந்யாசம் செய்து விட்டேன்.

—பைங்காநாடு வேங்கட்ராம சாஸ்திரிகள்

## மெட்ரோபாலிடன்
மாவரைக்கும் இயந்திரங்கள்

- நீடித்த உழைப்பு
- நிகரற்ற அமைப்பு
- உங்கள் இல்லத்திற்கு உறுதுணையானது




அளவுகள் : 1 லிட்டர் முதல் 20 லிட்டர் வரை

**Metropolitan Industries**
72, Sastry Road, Coimbatore-641009
Phone : 32396

---

விற்பனையாகிறது!

## ஜகத்குரு

தெய்வீக மாத சஞ்சிகை
வைகாசி இதழ்

**ஸ்ரீமத் சங்கர ஜயந்தி மலர்**

விலை ரூ 1·50
வருஷ சந்தா ரூ 18·00

**'ஜகத்குரு'** மாத சஞ்சிகை
மேற்கு மாம்பலம், சென்னை-33

டெபாசிட் கட்டக்கூடிய ஏஜண்டுகள் எழுதவும்.

---

# Solidaire
# சாலிடேர்
# ஸூப்பர் டீலர்
# Solidaire
# சாலிடேர்
# ஸூப்பர் டீலர்






## ஏஜென்ஸீஸ் &
## ஏஜென்ஸீஸ்

15, தெற்கு உஸ்மான் ரோடு, தி. நகர்,
சென்னை-17, போன் : 440004, 440725

"The Practice of duelling has become almost a profession"
'The English Spy' magazine (1825)

# 7

**ஸா**ந்தோமே பல நூற்றாண்டுகளாக வெவ்வேறு வாழ்க்கைத் தசைகளில் இருந்து வந்தது.

புனித தாமஸின் பெயரோடு அந்த ஊர் பிணைப்பு அடைந்த காரணத்தால் ஒரு கொத்து கிறிஸ்தவர்கள் எப்போதும் அந்த ஊரைச் சுற்றி வாழ்ந்து வந்தார்கள்.

நீண்ட காலமாகச் சிற்றூர் ஸ்தானத்தில் இருந்த ஊர், பின்னர் வியாபார நோக்குடன் சில போர்த்துகீசியக் குடும்பங்கள் குடியேறியவுடன் தனது தோற்றத்தை மாற்ற ஆரம்பித்தது.

கதை நிகழும் காலத்துக்கு இருநூறு ஆண்டுகளுக்கு முன்பே அந்த ஐரோப்பியக் குடும்பங்கள் அங்கே குடியேறி வாழத் தொடங்கி விட்டன.

இப்போது போர்த்துகீசியரும், ஏனைய ஐரோப்பிய ஆசிய வியாபாரிகளும் அந்த ஊரை ஒரு குட்டி நகரமாக மாற்றியிருந்தார்கள்.

கோவாவைப் பார்த்தவர்கள் லிஸ்பனைப் பார்க்க வேண்டாம் என்று அந்த நாளைய போர்த்துக்கீசியப் பழமொழி.

இந்தக் கோவாவுக்கு அடுத்த படியாக, செல்வப் பெருக்கிலும், வியாபாரப் பெருக்கிலும் இருந்தது ஸாந்தோமே.

இரவில் அந்தக் குட்டி நகரம் ஒரே பரபரப்பு அடைந்திருந்தது.

எல்லோரும் மறுநாள் காலையில் நடக்கவிருக்கும் ட்யூயலைப் பற்றியே பேசிக் கொண்டிருந்தார்கள்.

ஃபிரான்சிஸ் டே, டிரேக் ராஜுக்கு விட்ட சவாலைப் பற்றி விரிவாக விமரிசித்துக் கொண்டிருந்தார்கள்.

'இதெல்லாம் பணத் திமிரிலே விளைகிற சவால்கள். இந்தக் கால ஐரோப்பியருக்கே இது ஒரு சாபக்கேடு.' என்று பலர் கூறினார்கள்.

'ஹூம். இந்த ட்யூயல் இல்லாவிட்டால் எப்படி அவமானத்தை ஒருவன்



துடைத்துக் கொள்ள முடியும்? நிச்சயம் இது ஒரே வழி' என்றார்கள் சிலர்.

எல்லோரும் மறு நாள் காலையில் கடற்கரையில் நடக்கும் அந்த நிகழ்ச்சிக்குப் பெரிய ஆவலோடு காத்திருந்தார்கள்.

காலையில் கடற்கரையில் ஊர் ஏகோபித்துக் கூடியிருந்தது.

அலைகள் நீலக் குழல்களாக நெளிய, கரை வெள்ளியாகச் சிலும்பியது.

மணலைத் தாண்டி அப்பால், ஜனங்கள் ஒரே பரபரப்பில் நின்றார்கள்.

வெப்பம் தாங்காமல் சீமாட்டிகள் நாகுக்கான விசிறி மூலம் தங்களை விசிறிக்கொண்டிருந்தார்கள்.

பல்லக்குகள் மர நிழல்களில் குட்டி குட்டி சமாதிகள் போல் கிடக்க,

போகிகள் திறந்த உடம்புகளுடன் மரங்களின் மீது வாத்தி நின்றார்கள்.

தாமஸ் ஹாரிஸ் மத்தியஸ்தராக விளங்கினார்.

மணலில் அளந்து கோடுகள் போட்டுத் தமது ஆல்டர்மேன் கோட்டை இழுத்துவிட்டார்.

எட்டு மணிக்கு ஃபிரான்சிஸ் டே பதற்றமுடன் பல்லக்கில் வந்து இறங்கினார்.

கூட்டம் அவரை உற்சாகப் படுத்தியது.

அதை அடுத்து ட்ரேக் ராஜர் வந்து இறங்க, கூட்டம் அவனையும் உற்சாகப்படுத்தியது.

மணலில் அவர்களைக் குறித்த இடங்களில் நிற்கவைத்துவிட்டு, முக்கிய நிபந்தனைகளை மத்தியஸ்தர் அவர்களிடம் ஒன்றுக்கு இரண்டு தடவை அழுத்தமாகக் கூறினார்.

'ஒன், டூ, என்று சொல்வேன். அதுவரை கை கீழேதான் இருக்க வேண்டும். த்ரீ என்று சொன்னதும்தான் மேலே தூக்கவேண்டும். உடனே சுடவும் வேண்டும்.'

டே இன்னமும் பதற்றத்தில் இருந்தார்.

முந்திய இரவு அவர் ஏகமாகக் குடித்திருந்தார்.

தம்மால் சரியாகக் குறி பார்த்துச் சுட முடியும் என்ற நம்பிக்கை இல்லை.

இருந்தும் இப்போது அது ஒரு பெருமை விஷயமாக மாறிவிட்டது. இனி பின்வாங்கிப் பிரயோசனமில்லை. அந்த 'நாய்க்குப் பிறந்தவன்' அவர் சவாலைக் கேட்டு ஓடிவிடுவான் என்று நினைத்தார்.

இன்று காலைவரை அதுதான் நம்பிக்கை. ஆனால் காலையில் அவன் இன்னும் அப்படியே தீவிரமாக இருக்கிறான் என்று தெரிந்ததும் அவருக்கு சுவரம் குறைந்து விட்டது.

கடவுளைத் தொழுதுவிட்டுப் பெரிய நடுக்கமுடன் அங்கே வந்திருந்தார்.

மத்தியஸ்தர் எல்லா விஷயங்களையும் தயார்ப் படுத்திவிட்டு இரு எதிராளிகளையும் உஷார்ப் படுத்தினார்.



ராஜர் நெற்றியில் வியர்வை மினுக்கியது. கண்களில் தைரியம் இருந்தாலும், ஒரு மூலையில் கலக்கம் சின்னதாகத் தோன்றியிருந்தது.

இளம் வயது ஆதலால் கால்களை வலுவாக ஊன்றியிருந்தான் அவன்.

எட்டே காலுக்கு முதல் விசில் அடித்தார் தாமஸ் ஹாரிஸ்.

டே தமது கையில் உள்ள வியர்வையைக் கர்ச்சீப்பில் துடைத்தார்.

ராஜர் துப்பாக்கிப் பிடியில் மணல் போட்டுத் தேய்த்தான்.

'ஒன்'

## மூன்றும் மாடியிலிருந்து விழுந்த விசாகன்!

மூன்றும் மாடியிலிருந்துஎட்டிப் பார்த்துக் கொண்டிருந்த என் மகன் சி. விசாகன் (அப்பொழுது வயது நான்கு) கால் தவறிக் கீழே விழுந்து விட்டான். மூர்ச்சையடைந்த அவனை ராயப்பேட்டை ஆஸ்பத்திரிக்கு விரைந்து எடுத்துச் சென்றோம். தலையிலும் மற்ற பாகங்களிலும் உடனுக்குடன் பல எக்ஸ்ரே எடுத்துப் பார்த்ததில் எந்தவித எலும்பு முறிவும் இல்லவே இல்லை! பக்கத்திலிருந்த மரங்களின் மீது உரசி விழுந்ததால் இங்கும் அங்கும் சில சிராய்ப்புக்கள்தான் இருந்தன. டாக்டர்களுக்கே ஆச்சரியம்.

மயக்கத்திலிருந்த அவன் ஆறு மணிக்கு மெள்ள நினைவு பெற்றுக் கண் திறந்து பார்த்துத் தட்டுத் தடுமாறிப் பேசினான்: ''அப்பா எட்டிப் பார்க்கும்போது கால் தவறி விழுந்து விட்டேன். அப்பொழுது நீ பூஜை செய்யும் போட்டோவில் இருக்கும் பெரியவா, என்னை இரு கைகளாலும் பிடித்துக் கொண்டு, நெற்றியில் விபூதி, குங்குமம் இட்டார்'' என்று அவன் கூறியதைக் கேட்டு டாக்டரும், பக்கத்திலிருந்த நாங்களும் வியந்தோம். அதே சமயத்தில் காஞ்சிக்குச் சென்றிருந்த என் வீட்டுக்கு அடுத்த வீட்டிலிருந்த ஸ்ரீ ஹரி ஹர அய்யர் என்பவர் பெரியவாளின் பிரசாதத்துடன் வந்து, விஷயம் தெரிந்து ஆச்சரியப்பட்டு அதிர்ந்து நின்றார்.

இன்றும் பெரியவா ''மூன்றும் மாடியிலிருந்து விழுந்த விசாகன் என்ன படிக்கிறான்? எப்படி இருக்கிறான்?'' என்று நாங்கள் தரிசனம் செய்யப் போகும்போதெல்லாம் விசாரிப்பார். அவன் இந்த வருஷம் பி.காம் இறுதி ஆண்டு பரீட்சை எழுதுகிறான்.

—என். ஸ்ரீனிவாசன்



கூட்டத்தின் சளசளப்புக் குறைந்தது.

'டூ'

இப்போது நிசப்தம்.

இருவரும் ஒரு நேர் கோட்டில் நின்றாலும் அவர்களது வலது கைகள்தான் எதிரெதிராக நீட்டி இருந்தன. முகங்கள் வெவ்வேறு திசையைப் பார்த்தன.

ராஜரின் முகம் கிழக்கு நோக்கி, கடலைப் பார்த்திருக்க, டேயின் முகம் மேற்கு நோக்கிக் கரையைப் பார்த்திருந்தது.

''த்ரீ'' என்று குரல்.

அதைத் தொடர்ந்து ஒரு அசாதாரண சின்ன இடைவெளி.

அதைத் தொடர்ந்து இருவரும் சட்டென்று திரும்பித் தங்கள் கையில் பிடித்திருந்த ஃப்ளின்ட்லாக் பிஸ்டலை ஒரு முறை சுட்டார்கள்.

வெடிச் சத்தம் எழுந்ததும் நிசப்தம். அந்தப் பிரதேசம் முழுவதும் ஒரு படம்போல் அசைவற்றுக் கிடந்தது.

பிறகு ராஜர் கீழே தடுமாறி விழும்போதுதான் ஜனங்கள் கைதட்டி ஆரவாரித்தார்கள்.

ராஜரின் உதவியாளன் ஹம்மாண்ட் உடனே ராஜரைப் போய்த் தூக்க,

டேயின் உதவியாளன் நிக்கோலஸ் ஓடி வந்து டேக்கு மதுரா புட்டியைக் கொடுத்தான்.

வான் கோயன்ஸ் சிரித்தவாறு கால்களை அகலமாக வைத்து முன்னால் வந்தான். டேயின் கைகளைக் குலுக்கி, ''மிஸ்டர் டே! நீங்கள் அந்தப் பெண்ணை எடுத்துக்கொள்ளலாம்!'' என்றான்.

டே உடனே நிக்கோலஸை நோக்கித் திரும்ப, ''டே! இதென்ன பைத்தியக்காரத்தனம்?'' என்று ஒரு ஊசியான குரலைக் கேட்டு விலவிலத்தான்.

பெரிய பாப்பி நிற கவுனில் டியானா வந்து இறங்கினாள். இனிதான பதினெட்டாண்டு உடல். இரு கண்களிலும் மேற்கத்திய நீலம். பல்லக்கிலிருந்து நீண்ட, மெல்லிய, வெண்மையான கால்களைக் கீழே வைத்து,

''டே, இதெல்லாம் என்ன விளையாட்டு?'' என்று கோபித்தாள். கண்கள் ஸ்கார்லட் பொறிகளாயின.

டே சீக்கிரம் யோசித்தார்.

''ஏன் இங்கே வந்தாய் ஹனி! உனக்கு ஒரு அடிமை வாங்கி வைத்திருக்கிறேன். நீ பெருமை அதிகம் படுவாய்!'' என்றான்.

டியானா முகத்தில் ஆச்சரியம் ஒயவில்லை. ''டே! நீங்கள் என்ன செய்கிறீர்கள்! ஒரு அடிமைப் பெண்ணுக்காக ட்யூயல் நடத்துவீர்களா? வெட்கமில்லை?''

''என்னைச் சீண்டினான் அந்த மடையன்!''

''அதற்காக ட்யூயல் வரை போவீர்களா? நிச்சயம் நான் இதை எதிர்பார்க்கவில்லை. நீங்கள் நிதானம் நிறைய உள்ளவர் என்று நம்பியிருக்கிறேன்'' என்றாள் தன் வெறுப்பு தொனிக்க.

அப்போது கோயன்ஸ், ''மிஸ்டர் டே!'' என்று இடையில் செருகினான்.

''உங்களுக்கு என்ன வேண்டும்?'' என்றாள் டியானா.

''அந்த அடிமையை விற்பவன் நான்தான். பத்தாயிரம் பவுனில் போட்டி! டே வெற்றி பெற்று விட்டார்.''

''நோ! நோ!'' என்று ஒரு டெய்ஸி மலர் போல் முகத்தை ஆட்டினாள் அவள். ''அந்தச் சனியனை டே எடுத்துக் கொள்ளப் போவதில்லை. அந்தச் சண்டைக்காரர்களுக்கே கொடுங்கள்!'' என்று—சொல்லிப் படக்கென்று டே பக்கம் திரும்பி,

''டே! நீங்கள் உடனே என்னோடு வாருங்கள்!'' என்று கனமாகக் கூறினாள்.

மிகுந்த வேதனையுடன் கண்களை விழித்துப் பார்த்தபோது, ட்ரேக் ராஜர் தான் இன்னும் உயிரோடு இருப்பதை உணர்ந்தான்.

முதலில் அந்த வலி எங்கேயிருந்து வருவது என்று நிர்ணயிக்க முடியவில்லை.

அமிலம் ஊற்றியது போல் விண் விண் என்று தெறித்தது.

இருதயம் அடிபட்டது என்று நினைத்தான். பிறகு வயிறு அடிபட்டது என்று எண்ணினான். அல்லது இடுப்பில் குண்டு ஏறி விட்டதோ!

கடைசியில்இடது தோள்பட்டையிலிருந்து தான் எல்லா வலிகளும் புறப்படுகின்றன என்று தெரிந்தபோது,

அதன் மேலே கையை வைத்தான்.

தோள் இருந்த இடத்தில் நிணம் குதறி இருந்தது. கையை வைத்தது சுள்ளென்று காந்தியது.

''எவ்வளவு முட்டாள்தனக் காரியத்தைச் செய்தாய்!'' என்று கேட்டு ஹம்மாண்ட் அவனைத் தூக்கினான். மற்ற இரு நண்பர்கள் கை கொடுத்தார்கள்.

''உன் பெற்றோர்கள் கேட்டால் என்ன சொல்லுவோம்?'' என்றான் ஒருவன்.

அப்போது ''விலகுங்கள்! விலகுங்கள்!'' என்று ஒரு குரல் கேட்டது.

கோயன்ஸ் பரபரப்புடன் அவர்களை விலக்கினான். ''ராஜர்! எடு பணத்தை!'' என்றான்.

''எதற்கு?'' என்று கோபத்துடன் கேட்டான் ஒருவன்.

''டே அந்தப் பெண்ணை வாங்கிக்கொள்ளவில்லை. இப்போது முறைப்படி இவன்தான் வாங்கிக்கொள்ள வேண்டும்.''

''மிஸ்டர் கோயன்ஸ்! அவளை வேறு யாரிடமாவது விற்றுக் கொள்ளுங்கள். என் நண்பனை நாங்கள் இங்கிலாந்து அழைத்துச் செல்கிறோம்'' என்றான் ஹம்மாண்ட்.

''நோ, நோ! அதை ஒத்துக்கொள்ள முடியாது'' என்றான் கோயன்ஸ்.

அதைத் தொடர்ந்து அங்கே ஒரு விவாதமும் தொடர்ந்து சின்னக் கைகலப்பும் வர,

ராஜர் தனது திறனையெல்லாம் கூட்டி ''சிநேகிதர்களே!'' என்று கத்தினான்.

எல்லோரும் கப்சிப் என்று அடங்கினார்கள்.

ராஜர் இரண்டு நீண்ட சுவாசத்தை வாங்கிக்கொண்டு, ''நான் என் சொல்லைக் காப்பாற்றுவேன். நான் அந்த அடிமையை எடுத்துக் கொள்கிறேன். இந்தா கோயன்ஸ், இந்தப் பையில் பத்தாயிரம் இருக்கிறது. எடுத்துக் கொள்ளுங்கள்'' என்றான்.

''ராஜர்! வேண்டாம்; இது தற்கொலை'' என்றான் மார்கன்.



**ஞானதிருஷ்டி**

நான் நியூ காலேஜில் 1973ம் ஆண்டு படித்துக் கொண்டிருந்தபோது என்.ஸி.ஸி. காம்புக்காக காஞ்சிபுரம் போயிருந்தோம். கடைசி நாள். ஃபிரீ டே. அன்று பெரியவாளைத் தரிசிக்க நாங்கள் ஆறு பேர் போனோம். எங்களில் ஒருவர் முகம்மதியர், ஒருவர் கிறிஸ்தவர். பெரியவரை நாங்கள் நமஸ்கரித்தோம். கற்கண்டு, குங்குமப் பிரசாதம் கொடுத்து ஆசீர்வதித்தார். முகமதியரின் முறை வந்தபோது ''உன்னைப் பார்த்தால் இஸ்லாமிய மதத்தைச் சேர்ந்தவர் போலிருக்கிறது. ஆகவே கற்கண்டுப் பிரசாதம் மட்டும் தருகிறேன். பிரியப்பட்டால் எடுத்துக்கொள்'' என்று கற்கண்டு மட்டும் கொடுத்தார். குங்குமம் கொடுக்கவில்லை. அதே மாதிரி கிருஸ்துவ மதத்தைச் சேர்ந்தவரிடமும் கூறினார். அவ்விருவரும் பெரியவருடைய ஞான திருஷ்டியைக் கண்டு அதிசயித்து அவரை நமஸ்கரித்து ஆசீர்வாதம் பெற்றதை எங்களில் யாருமே மறக்க முடியாது.

(இதை எழுதிய அன்பர் கடிதத்தில் கையெழுத்திட்டு விலாசம் குறித்திருக்கிறார். கையெழுத்துத் தெளிவாயிராததால் பெயரை அறிய முடியவில்லை)

''அடி முட்டாள் தனம்''

''உன் பெற்றோர் என்ன நினைப்பார்கள்?''

''வெறும் கையோடவா ஊர் திரும்புவே?''

வரிசையாகக் கேள்விகளைத் தொடுத்தார்கள்.

கண்ணை மூடியிருந்த ராஜர் கையைத் தூக்கினான். பிறகு மெல்லிய குரலில், ''நண்பர்களே! என் மீது இவ்வளவு அக்கறை வைத்ததற்கு நன்றி! நான் தாயகம் இப்போ திரும்பவில்லை. இது ஆண்டவன் சித்தம். இங்கே என் உயிர் திரும்புகிறதா பார்ப்பேன். இல்லாவிட்டால் இந்த இந்திய மண்ணிலேயே இறப்பேன். என் பெற்றோர்களிடம் என் அன்பைத் தெரிவியுங்கள்! ஆண்டவன் அருள் இருந்தால் அவர்களை மீண்டும் சந்திப்பேன்'' என்றான்.

நண்பர்கள் முறை வைத்துப் பேசியும் ராஜர் அசையவில்லை.

எல்லோரும் தொங்கிய தலையுடன் விரக்தி ஆனார்கள்.

கோயன்ஸ் ராஜர் காட்டிய பையை எடுத்து நாணயங்களை எண்ணத் தொடங்கினான்.

இதற்குள் நண்பர்கள் தங்களுக்குள் வசூல் செய்து நூற்றிரண்டு பவுனை கோயன்ஸ் கையில் கொடுத்தார்கள்.

''மிஸ்டர் கோயன்ஸ்! ராஜரிடம் இருப்பது பத்தாயிரம்தான். இதை அவன் மருத்துவச் செலவுக்கு வைத்துக் கொள்ளுங்கள். எங்கேயாவது நல்ல வைத்தியரிடம் அவனை அழைத்துப் போங்கள். விபரீதம் நேர்ந்தால் அவனை நல்ல முறையில் அடக்கம் செய்யுங்கள். நாங்கள் வருகிறோம்'' என்றார்கள்.

ராஜரால் கண்களைத் திறக்க முடியவில்லை.

ஒவ்வொரு நண்பனும் அவனுடைய கையை எடுத்து முத்தமிட்டு விடை பெற்றார்கள்.

சீக்கிரத்தில் மணற் கரையில் ஜனங்கள் முழுதும் கரைந்து விட்டார்கள்.

கோயன்ஸ் அவசரமாக ஒரு பல்லக்கைக் கொணரச் செய்து அதில் ராஜரைத் தூக்கிப் படுக்க வைத்துப் புறப்பட்டான்.

காலை வெய்யில் ஏறி இருந்தது.

ஒரு மணி நேரம் நிழலான சாலையில் பிரயாணம் செய்து, ''ரோஸ் வில்லா'' தோட்டத்தில் ராஜரை இறக்கினான்.

வைத்தியர் ஹோம்ஸ் அங்கேதான் குடியிருந்தார்.

ராஜரைக் கீழே வராந்தாவில் இறக்கியதும் ஹோம்ஸ் அவசரமாக அவனைப் பார்க்க வந்தார்.

கோயன்ஸ் அவரிடம் விவரம் தெரிவிக்கு முன் ராஜர் மெள்ள முனகுவது கேட்டது.

''ராஜர், ராஜர்! உனக்கு என்ன வேண்டும்?'' என்றான் கோயன்ஸ்.

''கோயன்ஸ்! நான் இறந்து கொண்டிருக்கிறேன். அந்த அடிமைப் பெண்ணைச் சற்று என் முன்னால் கொண்டு வருவீர்களா?'' என்றான்.

கோயன்ஸ் வெளியே ஓடி அந்தப் பெண்ணை அழைத்து வந்தான்.

''ராஜர்! இதோ அந்த அடிமை! இதோ! இதோ!'' என்று கத்தினான்.

ராஜர் சிரமப்பட்டு ஒரு பெரிய இரும்புக் கதவைத் திறப்பது போல் தன் இமைகளைத் திறந்தான்.

அவன் முன்னால் சுவர்ணமுகி சோகமாக நிற்பதைப் பார்த்தான்.

திகிலும், பயமும் நிறைந்த அவளது கண் விழிகளைப் பார்த்தான்.

கண்டிய இரு அந்தகாரங்களாக விளங்கும் இரு கண்களைப் பார்த்தான்.

பருவ மேகம் போல் வழியும் கூந்தலைப் பார்த்தான்.

கோயில் விக்கிரகம் போல் ஜொலிக்கும் பொன் வதனத்தைப் பார்த்தான்.

மெள்ளப் புன்னகை புரிந்தான்.

(தொடரும்)

---

**பயம் நீங்கியது!**

1953ம் வருஷம் ஜூன் மாதக் கடைசியில், எனக்கு வேலைக்குப் போகப் பிடிக்காமல், காரியாலயத்துக்குப் போவதென்றால் ஒருவித பயம் ஏற்பட்டது. நாளடைவில் தூக்கமின்மையும் சேர்ந்து கொண்டது. 1952ல் தான் எனக்கு ஆபிசில் பதவி உயர்வு கிடைத்திருந்தது. நான் காரியாலயத்தில் சரிவர வேலை செய்யவில்லை என்று எனக்கே தோன்றிக் கொண்டிருந்தது. ஆனால் அப்படி ஒன்றுமில்லை என்று மேலதிகாரிகள் சொன்னார்கள்.

என் மனைவியிடமும், தாயார், தம்பியிடமும், ''நான் வேலைக்குப் போக மாட்டேன், என் குடும்பம் பாழாய்ப் போய் விட்டது'' என்று புலம்பிக்கொண்டிருந்தேன். லீவும் எழுதிப் போட்டு விட்டேன். எனக்கு அப்போது வயது 38. மனமுடைந்த என் மனைவி, ஒருசில நண்பர்களின் யோசனைப்படி என்னைக் காஞ்சிப் பெரியவர்களிடம் அழைத்துப் போனாள். மனைவி அழுதுகொண்டே தன் துயரைச் சொன்னாள்.



பெரியவர், 'நாளைப் பூஜைக்கு வா' என்றார். பூஜை முடிந்ததும், சிப்பந்தியிடம் சொல்லி, அபிஷேக ஜலத்தை எனக்கு ஸ்நானம் செய்விக்கச் சொன்னார். மறு நாள் நான் ஸ்நானத்துக்குப் போகும்போது எட்ட நின்றிருந்த என்னைக் கூப்பிட்டார். ''வேலைக்குப் போ'' என்று தம் கையிலிருந்த தீர்த்த பாத்திரத்தில் (மரச் செம்பில்) எழுதிக் காண்பித்தார். ''வேலையில் எனக்கு ஒன்றும் தெரியவில்லையே'' என்றேன். பெரியவர், ''செய்து கொண்டே இரு. போகப் போகத் தானே தெரியும்'' என்றார்.

செம்பரத்தைப் புஷ்பத்தைக் கொடுத்துச் சாப்பிடச் சொன்னார். பிரஸாதம் கொடுத்து 'க்ஷேமமாகப் போயிட்டு வா' என்று அருளினார்.

ஐந்து நாள் சென்று வேலைக்குப் போக ஆரம்பித்தேன். என்னுடைய கஷ்டங்கள் எல்லாம் கனவாகப் போயிற்று. நன்றாகத் தூங்க ஆரம்பித்தேன். மேலும், இரண்டு உத்தியோக உயர்வுகள் கிடைத்தன. எனக்காகக் கஷ்டப்பட்ட என் மனைவிதான் சுயங்கலியாகப் போய்விட்டாள். அவள் போன பின் என்னுடைய நான்கு பெண்களுக்கும் கல்யாணமாகி, என் மகனுக்கும் வரதட்சணை வாங்காமல் கல்யாணம் செய்தேன்.

பெரியவர்களின் அருளாசியினால் மாம்பலத்தில், சொந்த இல்லத்தில் சந்தோஷமாகவும் இருக்கிறேன்.

ஜெய ஜெய சங்கர! ஹர ஹர சங்கர!

—குஞ்சிதபாதம்

# ஒரு தாயின் குழந்தைகளாக..

அருள்வாக்கு

லோகத்தில் உள்ள அத்தனை பேருக்கும் தாயாராக இருக்கிறவள் அம்பாள். நமக்கு, நம் குழந்தைகளுக்கு, நம் மாதா பிதாக்களுக்கு, அவர்களுக்கு முன்னே வாழ்ந்தவர்களுக்கு, நம் குழந்தைகளுக்குப் பின்னேயும் வரப்போகிறவர்களுக்கு — எல்லாருக்கும் எக்காலத்துக்கும் மாதா அவள் ஒருத்திதான். நமக்கு மட்டுமில்லை; பசு, பக்ஷிகள், புழு பூச்சிகள், விருக்ஷங்கள், புல் பூண்டு எல்லாவற்றுக்கும் அவளே அம்மா. ஒரு வீட்டில் ஒரு தாயாருக்குக் குழந்தைகளாகப் பிறந்தவர்கள் ஒட்டிக் கொண்டு வாழ்கிறது போல, அந்த ஒரு அம்மாவுக்குக் குழந்தைகளான நாம் இத்தனை பேரும் அன்பிலே ஒட்டிக் கொண்டு ஒன்றுபட்டு வாழ வேண்டும். அந்த அன்புதான் அவள் ஸ்வரூபம்.

இந்த லோகத்தில் ஜட வஸ்துக்கள், உயிருள்ள பலவித ஜீவராசிகள் எல்லாம் தெரிந்தும் தெரியாமலும் பரஸ்பர ஸஹாயம் செய்து கொள்வதால்தான் நாம் உயிர் வாழ முடிகிறது. இந்தப் பழத்தை நாம் சாப்பிடுகிறோம் என்றால் அதை எங்கேயோ இருந்த ஒரு மரம் நமக்குக் கொடுத்திருக்கிறது. அதன் கொட்டையை எங்கேயோ இருந்த ஒரு காக்காய் கொண்டு வந்து போட்டிருக்கிறது. எவனோ ஒரு தோட்டக்காரன் அதற்கு ஜலம் விட்டிருக்கிறான். அப்புறம் யாரோ ஒரு கடைக்காரனிடமிருந்து அதை வாங்கியிருக்கிறோம். வாங்குவதற்குச் சம்பளம் எவனோ ஒருத்தன் கொடுத்ததால்தான் வாங்க முடிந்தது. இப்படி ஸூர்ய சந்திர நக்ஷத்திராதிகளிலிருந்து ஆரம்பித்துப் புழு பூச்சி வரை எல்லாம் பரஸ்பர ஸஹாயம் பண்ணிக்கொண்டே — தன் குழந்தைகள் ஒன்றுக்கொன்று உதவி செய்து கொண்டே ப்ரபஞ்ச வாழ்வு நடக்கும்படியாக அம்பாள் ஏற்பாடு பண்ணியிருக்கிறாள். இந்தப் புஷ்பத்தை நாம் பகவானுக்குச் சாத்துகிறோம் என்றால் எங்கேயோ ஒரு வண்ணாத்திப் பூச்சி மகரந்தப் பரிவர்த்தனை பண்ணித்தான் அந்தப் பூச்செடி உண்டாகியிருக்கிறது. அந்தச் சின்னப் பூச்சியின் ஸஹாயத்தால்தான் இன்று ஸாக்ஷாத் அம்பாளுக்கே அர்ச்சனை பண்ண இந்தப் புஷ்பம் கிடைத்திருக்கிறது. அவளுக்குத் தேனபிஷேகம் பண்ணுகிறோமென்றால், இந்த மஹா புண்யம் நமக்குக் கிடைப்பதற்காக எங்கேயோ ஆயிரம் தேனீக்கள் எத்தனையோ நாள் அரும் பாடுபட்டுத் தேன் சேர்த்ததால் தான் முடிகிறது.

இப்படி லோகம் முழுவதிடமிருந்தும் நாம் பெறுகிற பிரயோஜனங்களுக்குப் பிரதியாக உலகத்தில் உள்ள ஸகல உயிரினங்களுக்கு நம்மாலான உபகாரத்தைச் செய்ய வேண்டியது நம் கடமை. அம்பாள், ப்ரீதிக்காக நாம் பண்ண வேண்டிய கடமை. 'பேசாத நாளெல்லாம் பிறவா நாளே' என்றபடி பரோபகாரம் எதுவும் செய்யாத நாளெல்லாம் நாம் இருந்தும் செத்த நாளே என்று நினைக்கவேண்டும். மனோ-வாக்-காயம்-திரவியம் இவற்றில் எவையெவற்றால் எவ்வளவு முடியுமோ அவ்வளவுக்குப் பொதுத் தொண்டு செய்தேதீர்வது என்று தீர்மானிக்க வேண்டும். புது வருஷப் பிரதிக்ஞை, பிறந்த நாள் உறுதி என்றெல்லாம் சொல்வது போல் எந்த நாளுக்குமான சபதமாக உலகப் பணியை மேற்கொண்டு அம்பாளின் பூர்ண கடாக்ஷத்தைப் பெற வேண்டும்.

—ஜகத்குரு ஸ்ரீ காஞ்சி காமகோடி சந்திர சேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சாரிய சுவாமிகள்



திருப்பத்தூர் பஸ் ஸ்டாண்ட் ஓட்டல்.

முறுகலான மசால் தோசையின் முதுகைக் கிழங்குடன் கிள்ளி ஆசையாய் என் வாய்க்குள் திணித்துக் கொண்டிருந்தேன்.

''வாங்க மாப்பிளே!'' என்ற குரல் கேட்டது. திரும்பினால் என் மாமனார்!

''வழ்மேன்... உம்மாமுங்க...!'' மசால் தோசையை விழுங்கிக் கொஞ்சம் தண்ணீரையும் குடித்தேன். மாமனார் எனக்கு எதிரே உட்கார்ந்தார்.

என்னை நோக்கி மாமனாரும் மாமனாரை நோக்கி நானும் பாசத்துடன் தலையை நீட்டியபோது, குறுக்கே சர்வரின் பரட்டைத் தலை நீண்டு வந்தது.

''ஒரு காப்பி... ஜீனி கொஞ்சம் சேர்த்துப் போடு!'' என்று என் மாமனார் சர்வரை விரட்டிவிட்டு, ''எங்கே இந்தப் பக்கம்?'' என்று என்னை வரவேற்றார்.

''குருவிக்கொண்டான்பட்டியில் ஒரு பட்டிமன்றம்... வரதட்சிணை வாங்குவது நியாயமா, அநியாயமாங்கிற தலைப்பில்...''

மாமனார் சோகமாய்ச் சிரிப்பது போல் தெரிந்தது.

''நீங்க எங்கே திருப்பத்தூருக்கு?'' விசாரித்தேன்.

''இங்கே என் சிநேகிதர் ஒருத்தர். தெனப்பன் செட்டியார்னு பேரு.... கமிஷன் மண்டி வைச்சிருக்கார். நம்ம தோப்புப்பட்டி வயலை அவருக்கு வித்துடலாம்னு அவரைக் கேட்டுட்டுப் போக வந்தேன்.''

நான் மௌனமானேன். என் மாமனார் கொஞ்சம் ஒரு மாதிரி. பொடி போடமாட்டார். வெற்றிலை, பாக்கு, பீடி, சிகரெட் என்று எந்தச் சில்லறைப் பழக்கமும் இடையாது. மற்றபடி குடி, குதிரை, சீட்டாட்டம் இந்த மாதிரிப் பெரிய பழக்கங்கள்தான்!

''பொடிநாயக்கனூர்ல அத்தை நல்லா இருக்காங்களா?'' என்று கேட்டேன். ''ம்ம். இருக்கா... நீங்கதான் ரெண்டு வருஷமா அந்தப் பக்கம் வர்றதே இல்லையே?'' என்று மெதுவான குரலில் கூறினார்.

## முத்து. தங்க. ஐயப்பன்



# மயங்குகிறார் ஒரு மாப்பிள்ளை!



உண்மைதான். இரண்டு வருடங்களுக்கு முன் குதிரைப் பந்தயத்தில் தோற்றுப் போய் ஏலத் தோட்டத்தை சன விலைக்கு விற்றுவிட்டுக் குடி வெறியில் அத்தையை அவர் அடித்துக் கொண்டிருந்தபோது, என் மனைவியும், அவர் மகளுமான ஸ்ரீதேவியுடன் அங்கே தீபாவளிக்குப் போன நான் என் தலையில் அடித்துக் கொண்டே ஒரு சபதமும் செய்து விட்டேன்.

''மாமா!.... என்னைக்கு நீங்க இந்தக் குடி, சூதாட்டமெல்லாம் விட்டுட்டு நல்லபடியா இருக்கீங்களோ, அன்னைக்குத்தான் நான் உங்க வீட்டுக்கு வருவேன்'' என்று கூறிவிட்டு ஊர் திரும்பி விட்டேன். அன்று அங்கே போனவன்தான். அதன் பின் இன்றுதான் மாமனாரைப் பார்க்கிறேன்.

''நான் உங்க வீட்டுக்கு வரக் கூடாதுன்னு இல்லை மாமா... நீங்க நல்லபடியா மாறணும்னுதான் அப்படிச் சொன்னேன்.''

''நான் மாறுறது இருக்கட்டும் மாப்பிளே... நீங்க இப்படி மாறுவீங்கன்னு நான் எதிர்பார்க்கவே இல்லே! நீங்க கூட வயசு வித்தியாசம் பாக்காமே அன்னைக்கு எல்லார் மத்தியிலும் எனக்கு உபதேசம் பண்ணுனீங்க.... அதிலே எனக்கு வருத்தமில்லே ....சந்தோஷம்தான்....ஆனா நீங்களே இப்பக் குடிக்க ஆரம்பிச்சுட்டீங்களேன்னு நினைச்சாத்தான் எனக்கு வருத்தமா இருக்கு....''

''என்ன மாமா.... நானாவது குடிக்கறதாவது?''

''ஹூம்! நான் சொல்றதுக்கு என்ன மாப்பிளே இருக்குது. நீங்க படிச்சவங்க... காலேஜ்ல லெக்சரரா இருக்கீங்க. பத்திரிகையில கதை யெல்லாம் எழுதறீங்க... போறதுக்கு ஊர் ஊராப் பட்டி மன்றம் வேறே போடறீங்க...அதுஎன்ன சொன்னீங்க வரதட்சிணை நியாயமா, அநியாயமான்னு? நீங்க எந்தக் கட்சியிலே பேசறீங்க?''

''வரதட்சிணை வாங்கறது அநியாயம்கற கட்சியிலே.''

''நல்லாருக்கு! ரெண்டு மாசத்துக்கு ஒரு தடவை என் மக ஸ்ரீதேவியை நீங்க குடிச்சுட்டு அடிச்சு, உதைச்சு, 'போயி உங்கப்பன் கிட்டே ரெண்டாயிரம் வாங்கிட்டு வா... மூணாயிரம் வாங்கிட்டு வான்னு அனுப்பறது... மேடையிலேவரதட்சணை வாங்கறது அநியாயம்னு சத்தம் போட்டுப் பேசறது... நல்லாருக்கு மாப்பிளே! கல்யாண சமயத்திலே வரதட்சிணை வாங்க மாட்டேன்னு பிடிவாதமாச் சொன்ன ஆளுதான் நீங்க. அதை நான் ரொம்பப் பேர்கிட்டச் சொல்லிச் சொல்லிப் பெருமைப்பட்டிருந்தேன். ஆனா இப்ப ஒரு வருஷமா உங்களுக்கும் குடி, சூது எல்லாம் பழக்கமானதும் மாமனார் வீட்டைச் சுரண்ட ஆரம்பிச்சுட்டீங்கல்லே. மதுரையிலே உங்களுக்கு ஏதோ ஒரு தொடுப்பு இருக்குன்னு கூட ஸ்ரீதேவி சொன்னா... என்னவோ மாப்பிளே...அப்பப்ப பணம் குடுக்கிறதைப் பத்திக்கூட எனக்கு வருத்தம் இல்லே. ஆனா ரொம்பவும் குணசாலியா இருந்த நீங்க இப்படி ஆயிட்டீங்களேன்னு நினைச்சுத்தான் கவலைப்படறேன். தற்செயலா உங்களை இந்த ஊட்டல்லே சந்திக்கக்கிட்டதுனால மனசு தாங்காம சொல்றேன். வேணாம் மாப்பிளே? கெட்ட பழக்கமெல்லாம் தாங்கற உடம்பு உங்க உடம்பு இல்லே நான் வர்றேன். பிள்ளைக் குடுங்க!''

மாமனார் போய்விட்டார். நான் அப்படியே திகைத்து உட்கார்ந்து விட்டேன்.

பட்டி மன்றத்தில் பேசிவிட்டுக் கொட்டக் கொட்ட விழித்திருந்து முதல் பஸ்ஸைப் பிடித்து ஊருக்கு வந்தேன். வீட்டுக்குள்ளே நுழைந்ததும், நுழையாததுமாக, ''ஸ்ரீதேவி!'' என்று கத்தினேன்.

படுக்கை அறையிலிருந்து நரைத்த தலையுடன் ஓர் உருவம் வந்தது. அதிர்ச்சியுடன் கண்ணைக் கசக்கிவிட்டுப் பார்த்தேன். வியந்தேன்! ''அத்தை!'' என்றேன்.

அத்தை அவசரம் அவசரமாய்ச் சேலையைச் சரிசெய்து கொண்டு உள்ளே போனார்.

சற்று நேரத்தில் கருகருவென்று நெளி நெளி முடியுடன் ஸ்ரீதேவி வந்தாள்.

''ஏ....ஸ்ரீதேவி! நான் என்ன குடிகாரனா?'' என்று ஆரம்பித்தேன்.

''ஐயையோ.... பட்டி மன்றம் போய் இந்தப் பழக்கம் ஆரம்பமாகி விட்டதா?'' என்றாள் அவள்.

''ராத்திரி யெல்லாம் உங்களுக்குத் தூக்கமில்லையா அத்தான்?'' என்று பரிவோடு விசாரித்தாள்.

''ஆமாம்.... மதுரையிலே என் ஆசை நாயகி வீட்டிலே தங்கியிருந்தேன். தூக்கம் எப்படி வரும்?'' என்று சீறினேன் நான்.

அந்தக் கட்டத்தில் அத்தை மெதுவாய் அசைந்து வந்து அவளிடம், ''அவருக்குத் தக்காளி குருமா ஊத்துடி!'' என்றார்.

நான் எச்சரிக்கையடைந்து ''எனக்குத் தக்காளியும் வேண்டாம் முக்காலியும் வேண்டாம்'' என்று எழுந்தேன். ''ஏய் ஸ்ரீதேவி! என்னை என்னன்னு நினைச்சுக்கிட்டே? நான் குடிகாரனா? சீட்டாடறேனா? கெட்ட சகவாசம் வச்சிருக்கேனா? உன்னை அடிச்சு உதைச்சு உங்க வீட்டுக்கு அனுப்பறேனா?''

''யாரு சொன்னது அப்படி?''

''உங்க அப்பாதான் சொன்னார்.''

''அவரை எங்கே பார்த்தீங்க?''

''திருப்பத்தூர் பஸ் ஸ்டாண்ட் ஓட்டல்லே மசால் தோசை சாப்பிடறபோது பார்த்தேன்.''

ஸ்ரீதேவியும், என் மாமியாரும் ஒரு பார்வை பார்த்துக் கொண்டார்கள். ஸ்ரீதேவி கண்களை அழகாக உருட்டி, என்னைப் பார்த்து விட்டுத் தலையைக் கீழே போட்டுக் கொண்டாள்.

நான் சமாளித்தபடி, ''என்ன வேஷம் போடறே? நீயாத்தானே அடிக்கடி அம்மாவைப் பார்க்கணும், தங்கச்சியைப் பார்க்கணும்னு உங்க ஊருக்கு ஓடுறே? நான் ஏதோ கொடுமை செஞ்சு உன்னை அடிச்சுத் துரத்தறதா உங்க அப்பா கிட்டே சொல்லி அப்பப்ப பணம் வாங்கறியாமே?... என் னங்க அத்தை! மாமா சொன்னதெல்லாம் உண்மைதானா?'' என்றேன்.

அத்தை கொஞ்ச நேரம் அமைதியாய் இருந்துவிட்டுச் சொன்னார்.

''கோபப்படாதீங்க... உங்க மாமனார் குணம்தான் உங்களுக்குத் தெரியுமே. கெட்ட பழக்கங்கள்னாலே எல்லாச் சொத்தையும் அழிச்சிட்டார். மிஞ்சி இருக்கிறது ஒரு வீடும் வயலும்தான். அதுவும் இன்னும் எத்தனை நாளைக்கோ? இந்த லட்சணத்திலே ஸ்ரீதேவியோட தங்கச்சி ஸ்ரீப்ரியா வேறே வயசுக்கு வந்துட்டா! அவ கல்யாணத்தை மனசிலே வைச்சுக்கிட்டு அவருக்குத் தெரியாம நான் சேர்த்து வைச்சா அதையும் கண்டு பிடிச்சுக் குடியிலும் கூத்திலும் தொலைச்சுடறார். நீங்க நல்லவரு... வரதட்சிணை வேணாம்னு சொல்லிட்டீங்க.... அடுத்து வர்ற மாப்பிள்ளை எப்படி இருப்பார்னு சொல்ல முடியுமா?''

''அதுக்காக?''

''அதுக்காக நான்தான் ஸ்ரீதேவிகிட்டே சொல்லி அப்பப்பநீங்க கொடுமை பண்றதா எங்க வீட்ல வந்து அழுது ரெண்டாயிரம், மூணாயிரம்னு வாங்கிட்டுப் போன்னு யோசனை சொல்லிக் கொடுத்தேன். இது வரைக்கும் பதினைஞ்சாயிரம் ரூபாய் இப்படிச் சேர்ந்திருக்கு! நீங்க தப்பா நடக்கறதா ஸ்ரீதேவி சொல்லி அழறதனாலே அவருக்கும் கவலை வந்து பழைய கெட்ட பழக்கமெல்லாம் கொஞ்சம் கொஞ்சமா குறைய ஆரம்பிச்சிருக்கு. வீட்டுக்காரர் சரியில்லாத போது, வீட்டிலே வயசுப் பொண்ணை வைச்சுக்கிட்டு நான் என்ன செய்ய முடியும்? ஏதோ எனக்குத் தெரிஞ்ச யோசனை இது தான்.... அதுனாலே....''

''அதுனாலே?''

''இன்னும் பத்தாயிரம் ரூபாய் சேர்ற வரைக்கும் ஸ்ரீப்ரியா கல்யாணத்துக்காக நீங்க இதைக் கண்டும் காணாதது மாதிரி இருக்கணும்.... அதுவரைக்கும் நீங்க எங்க வீட்டுக்கு வராம இருந்தாக்கூட நல்லது தான்!''

''சரி சரி, அந்தத் தக்காளி குருமாவைக் கொண்டாங்க!'' என்று அதட்டினேன்.

---

### கருணைக்கடல்

எனது தகப்பனார் ஸ்ரீராமாச்சாரியாரும், பெரியவாளும் திண்டிவனத்தில் பள்ளித் தோழர்கள். 1938ம் ஆண்டு என் தந்தையார் நெல்லிக் குப்பத்தில் பாரி கம்பெனியில் பணியாற்றிய சமயம் ஸ்ரீசங்கராச்சாரியார் அண்மையிலுள்ள பூலோகநாதர் கோவிலில் முகாமிட வந்தார். இரண்டு கட்டு வீடான எங்கள் வீட்டின் முன்புறம் ரெட்டியார் தெரு. பின்புறம் சுவாமிகள் செல்லும் மார்க்கமான மெயின் ரோடு. நாங்கள் வாயிற் கதவைத் தாளிட்டுவிட்டு பின்புறக்கதவை திறந்து வைத்துக்கொண்டு பெரியவாள் பல்லக்கை எதிர் நோக்கியிருந்தோம். மதியம் சுமார் இரண்டு மணியளவில் மெயின் ரோடு வழியாக பரிவாரங்கள் வந்தன. முக்கால்வாசி பரிவாரங்கள் சென்றபின் ஒரு பரபரப்பு. ''சங்கராச்சாரியார் ரெட்டியார் தெருவில் நுழைந்து விட்டார்'' எனக் கூறினார்கள். நாங்கள் அவசர அவசரமாக வாயிற்புறம் நோக்கி ஓடினோம். வாயிற் கதவைத் திறப்பதற்கும், பெரியவாளின் பல்லக்கு எங்கள் வீட்டின் முன் நிற்பதற்கும் சரியாக இருந்தது. கருணைக்கடல் பல்லக்கிலிருந்த படியே என் தந்தையை அழைத்து ''ஸ்ரீராமா! உன்னை பார்க்கத்தான் வந்தேன். பூலோநாதர் கோவிலில் நாளை அஷ்டலிங்க பூஜை நடக்கிறது. நீ வைஷ்ணவனுமிற்றே! வருவாயா?'' என உரிமையோடு வினவினார். என் தகப்பனாரும் தண்டனிட்டு வருவதாகக் கூறினார்.

வீடுதேடி வந்து தம் பால்ய நண்பனின் குடும்பத்துக்கு தரிசனம் தந்த அந்த நடமாடும் தெய்வத்தின் அன்பை, இப்போது நினைத்தாலும் என் மெய் சிலிர்க்கிறது. -எல். ராகவாச்சாரி



# உங்கள் மிக்ஸியை உபயோகிப்பது எப்படி?

மின்சார சாதனங்கள் நுணுக்கமானவை. அவைகளைக் கவனமாகக் கையாளாவிட்டால், நமக்குவிபத்து ஏற்படுவதுடன் சாதனங்களும் பழுதாகலாம். மின்சார மிக்ஸியை எப்படி சரியான முறையில் கையாள வேண்டும்? இதோ சில குறிப்புகள்:






உபயோகிப்பதற்கு முன்னும் பின்னும் மிக்ஸியின் ஜாடியை நன்றாக சுத்தம் செய்யவும்.



மிக்ஸியை 30 நிமிடங்-களுக்கு மேல் தொடர்ந்து ஓட விட வேண்டாம். அது மிக்ஸி வேலை செய்வதைப் பாதிப்பது–மன்னியில் மிக சீக்கிரமே வீணாகவும் ஏதுவாகும்.



உங்கள் மிக்ஸி உரிய அளவிற்கு மேல் பொருள்களை இடா–தீர்கள். அதனால் மிக்ஸி வேலை செய்வது தடைப்படலாம்.



மிக்ஸி வேலை செய்–யாத போது பிளக்கி லிருந்தே தொடர்பைக் கழட்டி விடுங்கள்.



அரைக்க வேண்டிய முறைக்குத் தகுந்த மீனு மிக்ஸியில் பொத்தானை அழுத்தவும். பொருள்களுக்குத்தகுந்தபடி வேறு பிரான்டு. மிக்ஸிகளில் பிளேடுகளை மாற்றி உபயோகிக்கவும்.



மிக்ஸி வேலை செய்து கொண்டிருக்கும் போது ஸ்பூனையோ அந்த விரலையோ விடாதீர்கள். அது ஆபத்தானது.

ARES/ME/407 TAM

மக்கள் நலன் கருதி வெளியிடப்படுகிறது

**Meenu Equipments** கோயமுத்தூர் 641 009

தரமிகு தயாரிப்பாளர்கள்

# MeenuMix®

*-the engineer at your kitchen service!*

"மீனுமிக்ஸ்" 94, சிவாலயா பில்டிங், கமாண்டர் இன்சிப் ரோடு எழும்பூர், சென்னை 600 105.
தொ. பே. 811234 (விற்பனை) "மீனுமிக்ஸ்" 181 சிபவுண்டன் பிளாசா, பாந்தியன் சாலை எழும்பூர்,
சென்னை-600 008 (சர்விஸ் சென்டர்) மீனு எக்யூப்மெண்ட்ஸ், B.V.K அய்யங்கார் ரோடு, பெங்களூர்-560 053.

# சிரிக்க வைத்தே சிறக்க வைப்பார்!

ரா. கணபதி

குருநாதன் முகத்தில் குறு(ம்பு) நகை. விளையாட்டுப் பிள்ளை போல் கண்களில் ஓர் ஒளி. எதிரே யிருந்தவரிடம் கேட்கிறார்: ''இப்போ இங்கே இருந்து போறானே, அவன் பேர் என்ன?''

''ஸ்ரீகண்டன்.''

''இல்லை. அப்படிச் சொன்னால் ஸர்க்கார் அபிப்பிராயத்துக்கு விரோதமாயிடும்.''

ஏன் என்று புரியாமல் அடியார் விழிக்கிறார். அவரை விழிக்க விட்டுச் சிறிது வேடிக்கை பார்த்த பின் பெரியவாள் சொல்கிறார்: ''திருக்கண்டன்-னு சொன்னாத்தான் ராஜாங்கத்தார் ஒப்புக்கொள்வார்கள்.''

அடியாருக்குப் புரிந்து விடுகிறது. பெரியவாளோடு சேர்ந்து அவரும் சிரிக்கிறார். 'ஸ்ரீ' என்று வருமிடத்திலெல்லாம் 'திரு' என்று மாற்றவேண்டும்; ஸ்ரீரங்கம், ஸ்ரீபெரும்புதூர் போன்ற பெயர்களைத் திருவரங்கம், திருப்பெரும்புதூர் என்றே இனி வழங்க வேண்டும் என்று தமிழக அரசு முடிவு செய்திருப்பதாக அன்று காலைதான் செய்தி வெளியாகி யிருந்தது. அதனால் ஸ்ரீகண்டன் என்றுமட்டும் சொல்லலாமா?

பெரியவாள், ''இந்த இடத்திலே ஸ்ரீகண்டனை திருகண்டன்-னு சொல்றது தப்பு, தெரியுமோ?'' என்று கேட்கிறார். அது எப்படித் தப்பு என்பதையும் விளக்குகிறார்.

''ஸ்ரீ என்றால் லக்ஷ்மி என்று மாத்திரம் நினைத்துக்கொண்டு, 'ஸ்ரீ'யைத் 'திரு' ஆக்கு என்கிறார்கள். ஆனால் ''ஸ்ரீ'' என்பதற்கு வேறே பல அர்த்தங்களும் உண்டு. பாம்பு, பாம்பின் விஷம் இதற்கெல்லாம் கூட 'ஸ்ரீ' என்று பெயர். மங்கள காரியங்களுக்கு உதவாத செவ்வாய்க் கிழமைக்கு 'மங்கள வாரம்' என்று பெயர் வைத்த மாதிரி பாம்பை 'ஸ்ரீ' என்று சொல்வதுண்டு. 'ஸ்ரீ கண்டன்' என்றால் லக்ஷ்மியைக் கண்டத்தில் (கழுத்தில்) வைத்துக் கொண்டிருக்கிற மஹாவிஷ்ணு என்று அர்த்தமில்லை. மஹாவிஷ்ணு லக்ஷ்மியை வக்ஷஸ்தலத்தில் (மார்பில்) தான் வைத்துக் கொண்டிருக்கிறாரே தவிரக் கண்டத்திலே அல்ல. ஸ்ரீகண்டன் என்றால் ஸரியான அர்த்தம், ஸ்ரீ என்கிற பாம்பைக்கழுத்தில் போட்டுக் கொண்டிருக்கிற, அல்லது ஆலஹால விஷத்தைக் கழுத்தில் வைத்துக் கொண்டிருக்கிற நீலகண்டனான பரமசிவன் என்பதே.''

இப்படி அறிவுச் சுடர் தெறித்த பெரியவாள் முகத்தில் மறுபடியும் நகைச் சுவையின் பச்சை ஒளி மேவியது.

''திருக்கண்டனோ இல்லையோ, அவன் திருடன்'' என்றார். மேலும் பரபரப்பூட்டும் விதத்தில், ''நீங்கள் எல்லோருமே திருடர்கள்'' என்றார்.

''புரியவில்லையா? சீமான், சீனிவாஸன்-னு எல்லாம் சொல்கிறது எதை? ஸ்ரீமான், ஸ்ரீநிவாஸன் என்பதைத்தானே? ஸ்ரீ தமிழில் ''சீ'' ஆகுமென்றால், ''சீ''யை யெல்லாமும் இனிமேல் 'திரு' என்றுதானே சொல்லணும் என்னை 'ஜகத்குரு' என்று டைட்டில் கொடுத்து வைத்திருக்கிறீர்களோல்லியோ? அதனால் நீங்களெல்லாம் என் சிடர்கள்; சீ—டர்கள் அதாவது திரு—டர்கள்.''

விழுந்து விழுந்து சிரிக்கிறார். அவர் மட்டுமா அத்தனை பேருமே!

ஆனால் இந்தச் சிரிப்பிலேயே இது போன்ற மொழிபெயர்ப்புக்களைக் குறித்து அவர்கள் சிந்தனையைச் சிறக்கவும் வைத்து விடுகிறார்!



**ப**கல் சந்திரமௌளீச்வர பூஜை அப்போது தான் முடிந்தது.

''பிக்ஷைக்காரர்கள் எல்லாம் இந்தப் பக்கமாக வாருங்கோ'' என்று உரக்கச் சொல்கிறார் மடத்துச் சிப்பந்தி ஒருவர்.

தமக்குத் தாமே பேசிக் கொள்வதுபோலப் பெரியவாள், ''அப்போ நான்தான் அந்தப் பக்கம் போய் நிற்கணும்'' என்கிறார். சிறிது போது செல்கிறது. ''நான்தானே பிக்ஷைக்காரன்?'' என்கிறார். இன்னம் சிறிதுபோது சென்ற பின் சொல்கிறார்: ''(ஸம்ஸ்கிருதத்தில்) 'பிக்ஷை' என்று சொல்லி 'பிக்ஷைக்காரர்' என்றால் அது ஹோதாவாக இருக்கிறது. பிக்ஷை பண்ணி வைக்கிறவர்களும் அதைப் பெருமையாக எடுத்துக் கொள்கிறார்கள். ஸம்ஸ்கிருத 'பிக்ஷை'தான் தமிழில் 'பிச்சை' என்று ஆனது. 'பிக்ஷைக்காரர்கள்' என்பதையே 'பிச்சைக்காரர்கள்' என்றால் அவர்கள் கோபித்துக் கொள்ள மாட்டார்களா? நான்தான் பிச்சைக்காரன். பிச்சை போடுகிறவனா பிச்சைக்காரன்? வாங்குகிறவன்தானே பிச்சைக்காரன்?''

பிச்சாண்டி என்றும், பிக்ஷாடன மூர்த்தி என்றும் தமது உண்மை நிலையைச் சொல்லிக் கொண்டாரோ?

''**ரா**மராஜ்யம், ராமராஜ்யம் என்கிறார்களே அப்படிப்பட்ட ராமர் இருந்த காலத்தில் நாம் இல்லையே என்று எல்லோரும் நினைக்கிறார்கள். எனக்கு நல்ல வேளையாக ராமர் காலத்தில் நாம் பிறக்கவில்லையே என்று ஸந்தோஷமாகத்தானிருக்கு'' என்று பெரியவாள் கூறுகிறாரென்றால் தூக்கி வாரிப் போடுகிறதா? ஹாஸ்யக் கலைஞரல்லவோ அவர்? ஸஸ்பென்ஸ், ஸர்ப்ரைஸ் எல்லாம் வைப்பதில் தேர்ந்தவர் தொடர்கிறார்:

''ராமர் மனுஷ்யனாகத் தன்னை ரொம்பவும் குறைத்துக் கொண்டு க்ஷத்ரிய தர்மங்களை யெல்லாம் சாஸ்திரப்படி பண்ணிக் காட்டியவர். அவர் காலத்தில் என் மாதிரி ஒரு ஸந்நியாசியை, மடாதிபதியைப் பார்த்தால் என்ன பண்ணியிருப்பார்? அவரே ஓடிவந்து நமஸ்காரம் பண்ணி யிருப்பார்! அதைவிட ஒரு கஷ்டம் உண்டா? இப்போ பிறந்திருப்பதால்தான் அவருக்கு நமஸ்காரம் பண்ணுகிற பாக்யம் எனக்குக் கிடைத்திருக்கிறது!''



திருச்சியில் புனித சூசையப்பர் கல்லூரியில் படித்துக் கொண்டிருந்தேன். ஒரு நாள் தென்னிந்திய ரயில்வே காரியர் வீட்டில் ஆசாரியாளுக்குப் பாதபூஜை. என் உறவினர் ஒருவர் அங்கு என்னை அழைத்துச் சென்றார். பழங்கள் நிறைந்த தட்டை பெரியவாளுக்கு முன் வைத்துவிட்டு இருவரும் சாஷ்டாங்கமாக நமஸ்காரம் செய்தோம். பெரியவாள் அந்தப் பழத் தட்டை உற்றுப் பார்த்துவிட்டு என் உறவினரை நோக்கி ''இந்தப் பழங்கள் எனக்காக வாங்கினது இல்லை போலிருக்கிறதே. இதைத் திருப்பி எடுத்துக்கொண்டு போய் விடுங்கள்'' என்று சொல்லிவிட்டார். என் உறவினருக்குத் தூக்கிவாரிப் போட்டது. வெட்கத்தால் தலை குனிந்து தட்டை உடனே எடுத்துக்கொண்டு போய்விட்டார். பிறகு விசாரித்ததில் அவரிடம் ஏதோ சலுகைக்காக நாடிய ஒரு கூட்டுறவு சங்கக் காரியதரிசி அவரைக்காண வந்தபொழுது வாங்கி வந்த பழங்களைத்தான் அவர் எடுத்து வந்தாரென்று தெரிந்தது!

- சுந்தரேசன்

**ம**ஹா பூஜ்யர் என்று சொல்லப்பட்ட ஒரு நவீன கால ஸ்வாமிஜியை நாடிப் போய், ஏமாந்து திரும்பிய ஓர் அடியார் பெரியவாளிடம் தம் தாபத்தைக் கொட்டிக்கொண்டிருந்தார். ''பூஜ்யருமில்லை; ஒன்றுமில்லை; ஞான சூனியம்தான் என்று கொஞ்ச நாளிலேயே தெரிந்து விட்டது'' என்றார்.

பெரியவாளின் கண்களில், இதழில் குறுகுறு ஒளி!

''பூஜ்யர் என்றாலே சூன்யர் என்றும் அர்த்தம்தானே?'' என்று ஒரு புதிரைப் போட்டு விட்டு, பிறகு ''பூஜ்யம் என்றால் ஸைஃபர் இல்லையா?'' என்றாரே பார்க்கலாம்!

**பி**ராம்மணர்கள் கடல் கடந்து போவது ஆசாரக் காவலரான ஆசார்யப் பெருமானுக்கு உகந்ததல்ல என்று அறிந்த ஓர் அந்தண அடியார், சீமை சென்று திரும்பிய பின், அங்கு நமது ஆசாரங்களைத் தாம் வழுவாது பின்பற்றியதைப் பெரியவாளிடம் தெரிவித்தால் அதை ஏற்றுக் கொள்வார் என்று எண்ணினார். ''இங்கிலாண்டில் கூட விடாமல் அமாவாஸைத் தர்ப்பணம் பண்ணினேன்'' என்றார்.

''அதாவது நீ போனது போதாது என்று உன் பித்ருக்களையும் மேல் நாட்டுக்கு வரவழைத்து விட்டாயாக்கும்!'' என்று பெரியவாள் சிரித்துக் கொண்டே ஒரு வெட்டு வெட்டினார்!

''**நே**ரு kitchen religion— அடுப்பங்கரை மதம் என்று ஹிந்து மதத்தைப் பற்றி அடிக்கடி சொல்கிறபோது தாம்ரொம்ப நன்றாகப் பரிஹாஸம் செய்கிறோம் என்று நினைக்கிறார். வாஸ்தவத்தில் அவர்தான் ஹிந்து மதத்தின் ஸாரத்தைப் புரிந்து கொண்டு அதற்கு ஸர்ட்டிபிகேட் (நற்சான்றிதழ்) தருகிறார். நம் மதம் kitchen religion தான். அடுப்பங்கரை மதந்தான்'' என்பது நம் சிரிப்புச் சித்தி வைத்த இன்னொரு ஸஸ்பென்ஸ்.

புதிர் அவிழ்கிறது இதோ:

''நாரதர் ஸநத்குமாரரிடம் போய் ஆத்மவித்தை உபதேசிக்கச் சொன்னார். அப்போது ஸநத்குமாரர், 'ஆஹார சுத்தௌ ஸத்வ சுத்தி:' என்றுதான் ஆரம்பிக்கிறார். (சாந்தோக்ய) உபநிஷத்திலேயே இந்த விஷயம் இருக்கிறது. ''தூய உணவில் ஆரம்பி; அது தான் குணம் தூய்மையாவதற்கு வழி. இப்படி சித்த சுத்தி ஏற்பட்ட பின்தான்

படிப்படியாக ஈச்வர ஸ்மரணம், கட்டுக்கள் விடுபட்ட மோக்ஷம் எல்லாம் ஸித்திக்கும் என்று ஸநத்குமாரரே kitchen religionல் தான் ஆரம்பிக்கிறார்!''

முடிவாக ஒன்று — இதைக் கூறும்போது பெரியவாள் 'கல்கி'யை நினைத்திருப்பாரோ என்று எண்ண வைக்கும் ஒன்று — பார்ப்போம்.

நடராஜப் பெருமானைக் குறித்து ஆடலின் லயநயம் அற்புதமாக எதிரொலிக்கப் பதஞ்சலி முனிவர் ''சரண ச்ருங்க ரஹித ஸ்தோத்ரம்'' என்று ஒரு துதி அருளியுள்ளார். இத்துதிக் ந இப்பெயர் வந்தது ஏன் என்பதற்குப் பெரியவாள் தாமே இட்டுக் கட்டியதாகக் கூறும் கதை:

''நடராஜனைச் சுற்றி யிருப்பவர்களில் நாலு பேர் முக்கியமானவர்கள். ஒருத்தர் நந்தி — அவருக்குக் கொம்பு விசேஷம். இன்னொருத்தர் ப்ருங்கி — இவருக்கு இரண்டுக்குப் பதில் மூன்று கால்; அதனால் கால் விசேஷம். மூன்றாமவர் — வ்யாக்ரபாதர். இவரும் ஈச்வரனிடம் வரம் கேட்டே புலிக் கால் பெற்றிருந்ததால் கால் விசேஷக்காரர்தான். நாலாவதுதான் பதஞ்ஜலி. அவர் ஆதிசேஷ ஸ்வரூபம். பாம்புக்குக் காலும் கிடையாது, கொம்பும் கிடையாதோல்லியோ? அதனால் மற்ற மூன்று பேரும் இவரை மட்டம் தட்டிக் கேலி பண்ணினார்கள். 'அவனுக்கு என்ன கொம்பு முளைச்சிருக்கோ?' என்று கேட்பதால் கொம்பு ரொம்பவும் பெருமைக்குரியது என்று ஆகிறது. அடியார், பகவத் பாதர் என்றெல்லாம் மகான்களைச் சொல்வதால் காலும் விசேஷம் பெற்றது என்று தெரிகிறது. இந்தப் பெருமை தங்களுக்கு இருக்கிறதென்பதால், இல்லாத பதஞ்ஜலியை மூவரும் கேலி செய்தார்கள்.

''அவர் உடனே, 'எனக்குக் கொம்பும் காலும் மட்டும்தானா இல்லை? கண், காது என்றுகூடத் தனியாக இல்லை. பார்க்கிற கண்ணேதான் எனக்குக் கேட்கிற காதும். அதனால் 'கட்செவி' என்ற பேர். ஆனால் இது எனக்கு மட்டும் ஈச்வரன் பண்ணியிருக்கிற அநுக்ரஹம் என்றுதான் வைத்துக் கொள்கிறேன். உங்களுக்கெல்லாம் கண் வேறே, காது வேறே. அதனால் நீங்கள் நடராஜாவின் நாட்டியத்தைப் பார்க்கும்போது, ஸங்கீதத்தில் சொக்கிக் கண்ணை மூடிக் கொண்டாலோ, அல்லது லய ஜதிகளை நன்றாய்க் கவனிக்க வேண்டுமென்று காதைத் தீட்டிக் கொண்டாலோ அப்போது கண்ணின் 'கான்ஸென்ட்ரேஷன்' அந்த அளவுக்குக் குறைந்து நாட்டியத்தின் தர்சனானந்தம் குறைந்து விடுகிறது. எனக்குத்தான் கண்ணும் காதும் ஒன்றாயிருப்பதால் நேத்ரானந்தமும், ச்ரோத்ரானந்தமும் ஒன்றுக்கொன்று clash ஆகாமல் பூரண ரஸாநுபவம் உண்டாகிறது. காலும் கொம்பும் இல்லாத ஒரு ஜீவனுக்குத்தான் ஈச்வரன் இப்படி அநுக்ரஹம் பண்ணினான் என்று லோகத்துக்குத் தெரியும்படியாக நான் காலும் கொம்பும் இல்லாத ச்லோகங்களாலேயே அவனை ஸ்தோத்ரம் பண்ணப் போகிறேன். அவன் அந்த ஸ்தோத்திரத்திலேயே தன்னுடைய ஸ்வரூப வர்ணனையோடுகூட (அதாவது தர்சனானந்தத்தோடு கூட) ஸங்கீத லய விசேஷமும் (அதாவது ச்ரோத்ரானந்தமும்) ஏற்படும்படி அருளட்டும்' என்று கூறி ஸ்துதியைப் பண்ண ஆரம்பித்தார்.

''அதென்ன ஸ்வாமி, காலும் கொம்பும் இல்லாத ச்லோகம் என்கிறீர்? ச்லோகத்துக்கு ஏது காலும் கொம்பும்?' என்று நந்தியும் ப்ருங்கியும் வ்யாக்ரபாதரும் பதஞ்ஜலியைக் கேட்டார்கள்.

''அதற்கு அவர்,' 'அதுவா? கா, நா, சா என்று நெடில்களை எழுதும்போது 'கால்' வாங்குகிறீர்களல்லவா? கோ, நோ, சோ முதலான எழுத்துக்களுக்குக் 'கொம்பு' போடுகிறீர்களில்லையா? இப்படிக் காலும் கொம்பும் இருக்கிற எழுத்து ஒன்றுகூட இல்லாமல் என் மாதிரியுள்ள அக்ஷரங்களை வைத்தே ஸ்தோத்ரம்பண்ணப் போகிறேன்'' என்று சொல்லிவிட்டு இந்த சரண-ச்ருங்க-ரஹித ஸ்துதியைச் செய்தார்.

''சரணம் என்றால் கால்; ச்ருங்க என்றால் கொம்பு; ரஹித என்றால் இல்லாத. பதஞ்ஜலியும் சரண ச்ருங்க ரஹிதர்தான். சில ஆசிரியர்கள் தங்கள் பேரிலேயே பத்திரிகை நடத்துகிறது போலத் தம் பேரிலேயே அவர் ஸ்தோத்ரத்தைப் பண்ணி விட்டார்!''



நான் விஜயவாடாவில் டி. டி. கே. கம்பெனியில் பணியாற்றிக் கொண்டிருந்த சமயம். என் சீமந்த புத்திரிக்கு அப்த பூர்த்தியும் அதற்கு மறுநாள் என் தம்பிக்கு உபநயனமும் செய்வதற்காக எல்லா ஏற்பாடுகளும் ஆகி விட்டன. உற்றார் உறவினர் யாவரும் வந்திருந்தார்கள். அப்த பூர்த்திக்கு முதல் நாள் வைதீகாள் வருவதில் தடங்கல் ஏற்பட்டு விட்டது. என்னசெய்வதென்று புரியாத நிலையில் உடனடியாக சென்னையில் இருக்கும் என் நண்பருக்கு டிரங்கால் செய்தேன். டிரங்கால் பேசும்போது இரவு மணி .9-30. கடைசி ரயிலும் போய்விட்டதால் வைதீகாளை அனுப்ப இயலாது என்றார். எதேச்சையாக காஞ்சிப் பெரியவாள் பாத யாத்திரையாக மசூலிப்பட்டிணத்திலிருந்து விஜயவாடாவிற்கு அன்று இரவு வரும் விவரம் அறிந்தேன். நானும் என் மனைவியும் அவர்கள் வரும் இடத்திற்குச் சென்று காத்திருந்தோம். நமஸ்காரம் செய்த போது எங்களிடம் ஆசீர்வாத அட்சதையும் தேங்காயும் கொடுத்து அருகில் இருந்த திருவண்ணாமலை ராஜு சாஸ்திரிகளிடம் ''சுப காரியத்திற்கு வைதீகாள் கிடைக்காமல் மன சஞ்சலத்துடன் வந்திருக்கும் இவர்களுக்கு வேண்டியதைச் செய்து கொடு'' என்று கூறினார்! எங்கள் மன சஞ்சலத்தை ஞான திருஷ்டியால் அறிந்து ஆசீர்வாதம் செய்த அவரது மகிமையை எண்ணி ஆனந்தக் கண்ணீர் உதிர்த்தோம். பெரியவாள் அனுக்கிரஹத்தில் எல்லாம் நல்ல முறையில் நடைபெற்றது.

பி. எஸ். ராமசாமி

# அறுவை சிகிச்சை இன்றி மூலத்தை சுருக்குவீர் நமைச்சலையும் வலியையும் அபூர்வ மருந்தால் விரட்டுவீர்

நியூயார்க்—மருத்துவ விஞ்ஞானத் துறை இப்போது பெருமளவில் மூலநோயை அறுவை சிகிச்சை இன்றி சுருக்கும் ஒரு மருந்தைக் கண்டு பிடித்துள்ளது. மூல நோயால் ஏற்படும் வலியும் நமைச்சலும் நீங்கி, அதி விரைவில் மூலம் சுருங்கி குண மேற்பட்டிருப்பதை டாக்டர்களின் பரிசோதனைகள் நிரூபித்துள்ளன. பல ஆண்டுகள் மூலநோயால் துன்புற்றோர் கூட, “மூல நோய்ப் பிரச்சனை முடிந்து விட்டது” என்று மகிழ்வதாக கூறப்படுகிறது.

இப் புதிய மருந்தான ப்ரெபரேஷன் எச் களிம்பு, மூலத்தை சுருக்க உதவுவதோடு, நமைச்சலை நீக்கி வலியைத் தணிக்கிறது; மலப் போக்கின் போது வலியைக் குறைத்து எளிதாக்குகிறது.

ப்ரெபரேஷன் எச், இடும் குழாயுடன், 30 மற்றும் 50 கிராம் ட்யூபுகளில் எல்லா கெமிஸ்ட்டுகளிடமும் கிடைக்கிறது.

* Regd. User of TM: Geoffrey Manners & Co. Ltd.

252-PH 92 TAM

“ஜோங்கள், தருகிறேன்!”




'நட அண்ட் ராஜா' பஸ் சர்வீஸ் மானேஜருக்கு,

முன்பின் தாங்கள் பார்த்திராத ஸ்வப்னு எழுதும் கா. கடிதம். நீங்களென்ன பஸ் தான் வைத்து நடத்துகிறீர்களா? அல்லது 'ரோட் ரோலர்' சர்வீஸ் ஏதாவது நடத்துகிறீர்களா? நேற்றுக் காலை டவுனுக்கு வருவதற்காக உங்கள் பஸ்ஸில் ஏறினேன். ஏன் ஏறினோம் என்று ஆகிவிட்டது. பஸ் ஸ்டார்ட் ஆவதற்குள் இரண்டு பேர் எழுந்து வீட்டுக்குப் போய்க் குளித்துச் சாப்பிட்டு விட்டு வந்து விட்டார்கள். அப்புறம் ஒரு வழியாக பஸ் புறப்பட்டது. ஆஹா! ஜெட் வேகம்! ஒரு மாட்டு வண்டி உங்கள் பஸ்ஸை 'ஸைட்' வாங்கி விட்டதென்றால் உங்கள் வண்டியின் வேகத்தை கணித்துக் கொள்ளுங்கள்.

இருந்தாலும் உங்களுக்கு இவ்வளவு பேராசை கூடாது. எலெக்ட்ரிக் ட்ரெயினை தேவலாம் போல் இருக்கிறது. புளி மூட்டை கணக்காக இப்படி ஜனங்களை பஸ்ஸில் அடைக்க வேண்டுமா?

இப்படிப் பகல் கொள்ளை அடிக்கிறீர்களே ஒரு 'ஸ்டெப்னி' வைத்துக் கொண்டால் என்னவாம்? கூட்டு ரோடுக்கு வருவதற்கு கொஞ்ச தொலைவில் (ஏழு மைல்) முன் பக்க டயர் ஒன்று கோபித்துக் கொண்டு மூச்சு விட்டு விட, ஸ்டெப்னி இல்லாததால், கம்பெனி பெயருக்கேற்ற மாதிரி கூட்டு ரோடுக்கு நடந்து வந்து சேர்ந்தேன். கால் வலி தாள முடியவில்லை.

உங்கள் பஸ்ஸை நம்பி ஏறினால் ஸ்ரீ வைகுண்டத்துக்குத்தான் போக வேண்டும். அப்புறம் ஒரு முக்கியமான விஷயம். உங்களுடைய ஆயிரம் தலைகளை ஏற்றும் அபூர்வ பஸ்ஸில் என்னுடைய சில சர்ட்டிபிகேட்டுகளைத் தவற விட்டு விட்டேன் என்று நினைக்கிறேன். உங்கள் ஆட்கள் அதைக் கண்டெடுத்தால் உடனே அனுப்பி வைக்கவும்.

கோபத்துடன் ஸ்வப்னு

குறிப்பு: கா. கடிதம் என்றால் கால் வலி கடிதமாக்கும்! நீங்கள் வேறு மாதிரி நினைத்துக் கொள்ள வேண்டாம்.

பின் குறிப்பு: பஸ்ஸில் ஹாரன் தவிர மீதியெல்லாம் சப்தம் போட்டது.

● ● ●

ஸ்வப்னு அவர்களுக்கு,

பதில் வணக்கங்கள். தங்கள் கடிதம் ரெஜிஸ்டர் தபால் போலக் கிடைத்தது. ஸ்டாம்ப் ஒட்டாத காரணத்தால்! உங்களுக்கு ஏற்பட்ட கஷ்டத்தைப் படித்துக் கண்ணீரால் கர்சீப் நனைந்துவிட்டது. ச்சொ ச்சொ....

...போன மாதம் வரை ஜெட்டாகத்தான் பறந்து கொண்டிருந்தது. ஒரு நாள், பஸ் வேகமாகப் போகும்போது பிரேக் பெயிலாகி விட்டது. எதிரே ஒரு பையன்! அப்புறம்?... (மீதி அடுத்த கடிதத்தில்)

'ஸ்டெப்னி வைத்துக்கொள்வதற்கென்ன என்று கேட்டிருக்கிறீர்கள். எனக்குத் தெரிந்து எங்கள் பரம்பரையில் என் அப்பா, அவர் அப்பா, அவர் அப்பா, அவரோட அப்பா யாருமே ஸ்டெப்னி வைத்துக் கொண்டதை நான் பார்த்ததில்லை. நாங்கள் யோக்கியமான பரம்பரையாக்கும்!

பஸ்பாடி கட்டும் பிளஸ் பெருக்கும் பையனைப் பேட்டி கண்டு ஒரு வாரமாகிறது! அவனைக்கண்டு கேட்டுப் பிறகு விவரம் வரும்!

எங்கள் பஸ் ஸ்ரீவைகுண்டம் போக பெர்மிட் கிடையாது.

மதிப்புக்குரிய முதலாளிக்காக,
ஜெகன்

குறிப்பு: கா. கடிதமென்றால் கால் வலிக் கடிதமென்றுதான் நினைத்தேன். நீங்கள் சொல்வதைப் பார்த்தால் அதற்கு வேறொரு அர்த்தமும் இருக்கும்போல் இருக்கிறதே?

பின் குறிப்பு: இத்துடன் 'ஜயோ-டக்ஸ்' அனுப்பியுள்ளேன்.

• • •

மிஸ்டர் ஜெகன்!

வீட்டில் கஷ்டமாக இருந்ததால் வேலைக்குப் போகலாமென்று ஒரு கம்பெனிக்கு விண்ணப்பித்திருந்தேன். நான் ஒருத்திதான் விண்ணப்பித்தேனோ என்னவோ, இண்டர்வியூக்கு அன்று கூப்பிட்டிருந்தார்கள். உங்கள் குதிரை வாகனம் நடு வழியில் ஸ்டிரைக் செய்துவிட பின் கூட்டு ரோடுக்கு நடந்து வந்தேன். எண்ணி மூன்றாவது நிமிடத்தில் கிழக்கே போகும் கார் ஒன்று வந்தது. நான் கட்டை விரலை உயர்த்த, கார் நின்றது. உண்மையிலேயே அந்தக் காரை ஓட்டி வந்த இளைஞர் ஒரு ஜெண்டில்மேன்தான். ஒரு வார்த்தை பேசவில்லை. ஈஈஈ என்று இளிக்கவில்லை. அவர்தான் என்னை டவுன் வரைக்கும் கொண்டு வந்து விட்டார்.

அந்தக் கம்பெனியின் நல்ல காலமோ என்னவோ, எனக்கு அங்கு வேலை கிடைக்கவில்லை. எல்லாம் உங்கள் கருணை மிக்க பஸ்ஸால் வந்தது.

## அகந்தை அகன்றது!

எத்தனையோ ஆண்டுகளுக்கு முன் சாதுர்மாஸ்ய பூஜைக்காகப் பெரியவாள் நாகைக்கு விஜயம் செய்திருந்தார். நீலாய தாட்சி அம்மன் கோயில் தேவஸ்தான அலுவலகத்தில் முகாம்.

ஒரு நாள் முற்பகல் வேளை. பெரியவாள் தனியாக இருந்தார். அப்போது ஒரு தமிழ்ப் பண்டிதர் வந்தார்.

சற்று நேரத்தில் பெரியவாள் குசலம் விசாரித்து விட்டு, "தமிழில் கிழான் என்று ஒரு வார்த்தை இருக்கு; இல்லே? நிலக்கிழான் என்கிறோம். இது ஆண் பால். இதற்குப் பெண் பால் என்ன?" என்று கேட்டார். வந்த பண்டிதருக்குக் குழப்பம். என்ன பதில் சொல்லுவது? கிழாள், கிழவள்... கிழவி... தவித்தார்.

கொஞ்சம் அவரைத் தவிக்க விட்டுவிட்டு, "கிழத்தி என்று இருக்கே. இல்லக் கிழத்தி என்று சொல்லுவதுண்டே" என்றார் பெரியவாள்.

நெஞ்சில் கையை விட்டு எதையோ துடைத்து எடுத்துவிட்ட மாதிரி இருந்தது பண்டிதருக்கு. பிறகு பெரியவாள் ஆசியோடு, மகிழ்ச்சியோடு, லேசான மனசோடு திரும்பினார். - கார்த்திக்



ஆமாம், சர்ட்டிபிகேட் விஷயம் என்னவாயிற்று?

ஸ்வப்னா.

குறிப்பு: நீங்கள் எதற்குத்தான் பெர்மிட் வைத்திருக்கிறீர்கள்? ஸ்டெப்னி என்பதற்கு உங்கள் அகராதியில் நல்ல அர்த்தமே கிடையாதா?

பின் குறிப்பு: பெரிய 'ஹிட்ச்காக்' என்று நினைப்போ? அந்தப் பையன் விஷயம் என்னவாயிற்று?

• • •

அன்புள்ள ஜெகன்மோகினிக்கு,

நீங்கள் விண்டு கூறவே வேண்டாம்; எரிந்து விழுவதைப் பார்த்தாலே உங்களுக்கு வேலை கிடைக்கவில்லை யென்று புரிகிறது. விடுங்கள் கோபத்தை. அந்தக் கம்பெனியாவது பிழைத்துப் போகட்டும்! ஆமாம், அன்று எந்தக் கம்பெனிக்கு 'இண்டர்வ்யூ' போய் வெற்றிகரமாகத் திரும்பி வந்தீர்கள்?

சர்ட்டிபிகேட் விஷயமாக என் முதல் கடிதத்தைத் திருப்பிப் படிக்கவும். 'பையன் கதி என்னவாயிற்று' என்று கேட்டிருந்தீர்கள். டிரைவர் வண்டியைச் சாமர்த்தியமாக வலது பக்கம் ஒடித்து ஆற்று மணலில் இறக்கி, பஸ்ஸைப் பையன் மேல் மோதாமல் நிறுத்தினார். அவ்வளவுதான். வேறொன்றுமில்லை.

ஜெகன்

குறிப்பு: நீயே ஏதாவது எழுதிக்கொள்.

பின் குறிப்பு: நீங்கள் மிளகாய் பஜ்ஜி சாப்பிட்டுவிட்டுக் கடிதம் எழுதுகிறீர்களா? பிரியமாகவே உங்களுக்குக் கடிதம் எழுத வராதா?

• • •

யூ ஹெல்!

'எந்தக் கம்பெனிக்கு 'இண்டர்வியூ' போயிருந்தாய்' என்று கேட்டிருந்தீர்கள். அது ஒரு சிட்டுக் கம்பெனி. பெயர்? 'கோவிந்தா அண்டு கோவிந்தா'!

ஒரு நல்ல வேலை கிடைக்காமல் செய்துவிட்ட உங்கள் பஸ் மீதும் பஸ் மானேஜர் மீதும் மான நஷ்ட வழக்குப் போடத் தீவிரமாக யோசித்துக் கொண்டிருக்கிறேன்.

ஸ்வப்னா

குறிப்பு: மான நஷ்ட வழக்குப் போட ஒரு நல்ல வக்கீல் பெயரைச் சிபாரிசு செய்யவும்.

நன்றியில்லா ஸ்வப்னாவுக்கு,

வக்கீலிடம் செல்லத் துடிக்கும் வனிதையே! சற்று நில்லும். யாம் செப்புவதைக் கேளும்.

கோவிந்தா அண்ட் கோவிந்தா நிறையப் பேருக்குக் கோவிந்தா போட்டு விட்டதால், நீங்கள் திரும்பிப் போன அரை மணிக்குள் கம்பெனியில் இருந்த அத்தனை பொருட்களையும் - கம் ஆட்களையும் அள்ளி போலீஸ் லாரியில் போட்டுக் கொண்டு போய்விட்டார்கள். அன்று மட்டும் நீங்கள் சரியான நேரத்துக்கு 'இண்டர்வியூ'க்குப் போயிருந்தீர்களானால் உங்கள் மானம் நிஜமாகவே நஷ்டம் ஆகியிருக்கும்.

ஜெக்

குறிப்பு: என் தாத்தா கூட ஒரு வக்கீல்தான். ஆனால் அவர் கேஸ் எடுத்துக்கொள்ள மாட்டார். காரணம் அவர் காலமாகி விட்டார்.
பின் குறிப்பு: ஸ்டெப்னி இல்லாதது எவ்வளவு நல்லதாகப் போய் விட்டது பார்த்தீர்களா?

● ● ●

டியர் ஜெகன்!

உங்களுக்கு எப்படி நன்றி சொல்வதென்றே எனக்குத் தெரியவில்லை. அப்பாடா! நினைக்கும்போதே உடல் நடுங்குகிறது. உங்கள் பஸ் மட்டும் அன்று 'பிரேக் டவுன்' ஆகவில்லை என்றால் என் நிலையும் டவுனாகி இருக்கும். வாழ்க உங்கள் பஸ்! நீங்களும் வாழ்க!

பட்டதாரிணியான எனக்கு வேலையில்லாமல் இருப்பது மிகவும் கஷ்டமாக உள்ளது. ஜெகன், நீங்களாவது எனக்கு ஒரு வேலைக்கு ஏற்பாடு செய்யக் கூடாதா?

நன்றியுடன் ஸ்வப்னா

குறிப்பு: இவ்வளவு பெரிய உதவி செய்த உங்களுக்கு என்ன வேண்டும் கேளுங்கள். தருகிறேன்.

● ● ●

அன்பு ஸ்வப்னுவுக்கு,

ஜெகன் எழுதும் கடிதம். நன்றி எப்படிச் சொல்வதென்றே எனக்குத் தெரியவில்லை என்று எழுதியிருந்தாய். இதற்குப் போய் நன்றி எதற்கு? ஒரு காதலி உதவி கேட்டு வந்தால் அவள் காதலன் மறுத்து விடுவானா? அதுபோல்தான் இதுவும்.

பட்டதாரிணியான உனக்கு வேலை இல்லாததைக் கண்டு நான் மிகவும் மனம் நொந்து போனேன். உன் பரிதாபத்தை நினைத்து மாதம் ஐநூறு ரூபாய் ஜாக்கெட் அலவன்ஸ் தரப்போகிறேன். ஆனால் ஒரு கண்டிஷன். நீ முப்பத்து மூன்று வருடங்கள் மூன்று மாதம் எந்த வேலையிலும் சேர்ந்து வேலை செய்திருக்கக் கூடாது. அதற்குத் தகுதியிருந்தால் விண்ணப்பிக்கவும்.

ஜெகன்

குறிப்பு: பின்னால் கேட்கிறேன். தரவும்.
பின் குறிப்பு: என் அப்பா உனக்கு ஒரு வேலை போட்டுத் தருவதாகச் சொன்னார்.

● ● ●

மடத்திலகமே!

உங்கள் கடிதத்தைப் படித்ததும் உங்கள் மனத்திலும் மண்டையிலும் ஒன்றும் இல்லை யென்பது உள்ளங்கை நெல்லிக்காய். என்னை உங்களைப் போல ஒன்றுமில்லாதவள் என்று நினைத்து விட்டீர்களா? சுமார் எழுபது லட்ச ரூபாய் சொத்துக்கு ஒரே வாரிசு நான். பொழுது போகாமல் 'போர்' அடிக்கிறதே என்று வேலைக்குப் போக உங்களிடம் உதவி கேட்டால், உதவிப் பணமா தருகிறீர்! இனி வீணாக உங்கள் கற்பனையைப் பறக்க விட வேண்டாம்.

ஆமாம், உங்கள் அப்பா எனக்கு ஏதோ வேலை போட்டுத் தருவதாகச் சொன்னீர்களே, என்ன வேலை அது? ஸ்வப்னு.

குறிப்பு: நீரும் உம் கண்டிஷனும். என் வயதே 20.5தான்!

● ● ●

அன்பே!

ஸ்வப்னு! உனக்குத்தான் எப்படிக் கோபம் வருகிறது! அடேயப்பா! ஒரு சமயத்தில் என்னை 'ஜெண்டில்மேன்' என்கிறாய். இன்னொரு சமயத்தில் 'ம.தி.' என்கிறாய். என்ன புரியவில்லையா? எப்போது என்னை ஜெண்டில்மேன் என்று சொன்னாய் என்று தடுமாறுகிறாயா? அன்று பஸ் பாதியில் நின்றுவிட உனக்கு காரில் டவுன்வரை லிப்ட் கொடுத்தது அடியேன்தான்!. திகைக்க வேண்டாம். அப்புறம் இன்னொரு . விஷயம். நான் 'நட அண்ட் ராஜா' பஸ் சர்வீஸ் மானேஜர் அல்ல. பின்? உரிமையாளரின் ஒரே மகன். ஸ்டேட்ஸில் டாக்டராக இருக்கும் நான் விடுமுறையில் ஊருக்கு வந்திருக்கிறேன். இடையில் இப்படியொரு அழகியைச் சந்திப்பேன் என்று நினைக்கவில்லை. காரில் லிப்ட் கொடுத்த அன்று நேர் வழியில் சென்றிருந்தால் நீ நேரத்துக்கு கம்பெனிக்குப் போயிருக்கலாம். வேண்டுமென்றே சுறுக்கு வழியில் சுற்றிக் கொண்டு உன்னை அழைத்துப் போனேன். காரணம்: என்னவள் வேலைக்குப் போவது எனக்குப் பிடிக்கவில்லை. புரிகிறதா?

வருகிற புதன் கிழமை உன் வீட்டில் 'பஜ்ஜி, சொஜ்ஜி' சாப்பிட என் அம்மாவோடும் அப்பாவோடும் வருகிறேன்.

ஜெகன்

குறிப்பு: என் அப்பா உனக்குத் தருவதாகச் சொன்ன வேலை இதுதான்: மருமகள்.

பின் குறிப்பு: நான் செய்த உதவிக்கு 'என்ன வேண்டும், கேளுங்கள் தருகிறேன்' என்று முன்பு சத்தியம் செய்திருந்தாய். அதை நம் முதல் இரவில் கேட்கட்டுமா?

● ● ●

ஹாய் ஜக்!

சரியான அழுக்குப் பேர்வழி நீங்கள். பின்னே என்னவாம்? ஒன்றும் தெரியாத பாக்யராஜ் மாதிரி காரில் லிப்ட் கொடுத்து விட்டு, என்னென்ன குறும்புத்தனம் செய்திருக்கிறீர்கள்! ஜெண்டில்மேன் என்று உங்களைச் சொன்னதை வாபஸ் வாங்கிக் கொள்கிறேன்.

எவ்வளவு உயர்ந்த மனிதரான நீங்கள் எனக்காக எவ்வளவு தாழ்ந்து போயிருப்பது எதைக் காட்டுகிறது தெரியுமா? விடை: குறிப்பைப் பார்க்க.

அன்று நீங்கள் போட்டிருந்த கோடு போட்ட சர்ட் உங்களுக்கு ரொம்பவும் பாந்தமாக இருந்தது. உடம்பை நன்றாகக் கவனித்துக் கொள்ளுங்கள். புதன் கிழமைக்காகக் காத்திருக்கிறேன்.

தங்கள்

ஜெகன்-மோகினி

குறிப்பு: காதல், காதல், காதல்!

# உங்கள் கேசம் அடர்த்தியின்றி சக்தியின்றி இருக்கிறதா? உங்கள் கேசத்தைப் பக்குவப்படுத்தி அழகையும் ஆரோக்கியத்தையும் அளிக்கிறது...



**செழுமையான புரதப்போஷாக்கு நிறைந்த**

## ஹேலோ எக் ஷாம்பூ

ஊட்டம் குறைந்த நிலையில் உங்கள் கேசம் அடர்த்தியின்றியும், சக்தியின்றியும், ஆரோக்கியமின்றியும் காணப்படுகிறது.

பட்டுப்போன்ற, பொன் நிறமுள்ள வழவழப்பான ஹேலோ எக் ஷாம்பூ செழுமையான புரத ஊட்டம் நிறைந்த உத்தியின் மூலம் உங்கள் கேசத்தை சீராகப் படியவைத்து அதற்குத் தேவையான எல்லா ஊட்டங்களையும் அளிக்கிறது. உங்கள் கேசம் அழகாக ஆரோக்கியமாக, அடர்த்தியாகத் திகழ்கிறது.

ஹேலோ எக் ஷாம்பூவின் செழுமையான நுரை வளம் உங்கள் கேசத்தில் புகுந்து அதை பொலிவுடனும் தூய்மையான பளபளப்புடனும் திகழச் செய்கிறது.

**ஹேலோ எக் ஷாம்பூ ...**

**அழகிய அடர்த்தியான ஆரோக்கியமான கேசத்திற்கு**

















## தவசீலரின் திருக்கோலங்கள்

1. காஞ்சிப் பெரியவாள் பிறந்த வீடு. 2. பெரியவர் படித்த பள்ளி 3. இளமைத் தோற்றம். 4. பெரியவர்கள் பீடமேறிய தருணத்தில் 5. ஜயேந்திர சரஸ்வதி சுவாமிக்கு அருளுபதேசம். 6. மலர்க்கிரீடத்துடன் அருள் பார்வை. 7. சென்னை சர்வ கலாசாலை விஜயத்தில் ஸ்ரீ வே. ராகவன் காட்டும் நூலில் காஞ்சி முனிவரின் தீவிர ஆய்வு. 8. சக்கரத்தாழ்வாருக்கு அபிஷேகம் நடக்கும் வைபவத்தில் இரு பெரியவர்களும். 9. தேனம்பாக்கத்தில் சிவராத்திரி தன்றுனில். 10. காஞ்சிப் பெரியவர் தியானத்தில் மூழ்கிய திருக்கோலம்,

# விசாரணை செய்யாது இதயங்கள்

விஜயபாலன்

வெருவான அலங்காரத்துடன்...

அழகுத் தேவதையாக மாடியிலிருந்து இறங்கி வந்தாள் டாக்டர் சிநேகா.

மகளை நிமிர்ந்து பார்த்த சிவசங்கரன் மணிக்கட்டைத் திரும்பிப் பார்த்தார்.

''ஏம்மா.... சிநேகா! இப்பவே ரொம்ப நேரமாயிடுத்தே. டிஸ்பென்ஸரிக்கு இன்னுமா போகலே?''

''இன்னைக்குப் போகலேப்பா!''

''ஏம்மா?''

''ஐய்யோ.... அப்பா!'' என்று தன் அப்பாவைச் செல்லமாகக் கடிந்து கொண்டாள் சிநேகா.

''இன்னைக்கு என்ன தேதிப்பா?''

''மே 27... அடடே! இன்னிக்கு அமெரிக்காவிலேருந்து பிரபு வர்றான் இல்லே? ஐயாம் ஸோ ஸாரி மை சைல்ட்...பிஸினஸ் அது இதுன்னு ஏகப்பட்ட பிரச்னைகள். அதனால்தான் ஞாபகமில்லே. அதுதான் இன்னைக்கு ஏகப்பட்ட வகையான மீல்ஸ்... பலகாரங்கள் எல்லாம் தடபுடலா இருக்கா? நீதான் எப்பவும் அவன் ஞாபகமாவே இருக்கியே... அவன் வரட்டும். முதல்லே அவனைப் பிடிச்சு உன் தலையிலே கட்டிட்டுத்தான் மறு வேலே....''

''போங்க டாடி....''

''ஸாரி மை சைல்ட். இன்னைக்குக் கம்பெனி விஷயமா கான்ஃபரன்ஸ் இருக்கு. நான் கட்டாயம் அதுல கலந்துக்கணும். நீ முன்னால போ. நான் அதுல கலந்துகிட்டு ஒரு மணி நேரத்திலே ஏர்போர்ட்டுக்கு வந்தர்றேன். நான் வர லேட்டாயிடுச்சுன்னு நீயே பிரபுவை ரிசீவ் பண்ணிக் கூட்டிக்கிட்டு வந்துடு. ரெண்டு வருஷத்துக்குப் பின்னாடி சந்திக்கிறீங்க. பேச வேண்டிய விஷயங்கள் நிறைய இருக்கும். குறுக்கே நான் எதற்கு?''

சிவசங்கரன் அர்த்தத்தோடு மகளைப் பார்த்துச் சிரித்தார்.

''போங்கடாடி! நீங்க ரொம்பக் குறும்பு!''

சிநேகாவின் வெண்மையான மென்மை விரல்கள் ஸ்டீயரிங்கைச் செல்லமாகத் தடவ....

கார் வெகு சந்தோஷத்துடன் ஓடிக்கொண்டிருந்தது.

பிரபு, சிவசங்கரனின் தங்கை வத்சலாவின் ஒரே மகன்.

வத்சலாவும் அவளது கணவர் சந்திரசேகரும் ஒரு கல்யாணத்துக்கு வெளியூர் சென்றுவிட்டுக் காரில் திரும்பிக் கொண்

டிருந்தபோது எதிர்பாராத விபத்தினால் இறந்து போனார்கள்.

அதன் பிறகு சிவசங்கரன்தான் பிரபுவை வளர்த்தார்.

பிரபுவின் அதி புத்திசாலித்தனம், திறமை எதையும் எளிதில் செய்து முடிக்கும் துடி துடிப்பு இவையெல்லாம் சிவசங்கரனுக்கு மிகவும் பிடித்திருந்தது.

தம் ஒரே மகள் ஸ்நேகாவை அவனுக்குத் தான் கொடுக்க வேண்டுமென்று முடிவு செய்திருந்தார்.

பிரபுவும் ஸ்நேகாவை விரும்பினான்.

ஸ்நேகா பிரபுவின் மேல் உயிரையே வைத் திருந்தாள்.

பிரபு தொழில் துறை சம்பந்தப்பட்ட மேல் படிப்புக்காக அமெரிக்கா செல்ல வேண்டி இருந்தது. அவன் அமெரிக்கா புறப்படுவதற்கு முதல் நாள் சிவசங்கரன் பிரபுவுக்காக எல்லோருக்கும் விருந்து கொடுத்தார். விருந்து முடிந்ததும் சிவ சங்கரனின் நண்பர் பாரதி தேவராஜன் அவரைத் தனியே அழைத்தார்.

கூடவே ஸ்நேகாவும் இருந்தாள்.

சொன்னார்.

''மிஸ்டர் சிவசங்கரன்... இந்தக் காலத்து இளைஞர்களின் மனசை நாம் சரியாக எடை போட முடியாது. நீங்க பிரபுவை உங்க பெண் ஸ்நேகாவுக்குத் திருமணம் பண்ணி அப்புறம் அவரை அமெரிக்காவுக்கு அனுப் பறதுதான் நல்லது. ஏன்னா ஸ்நேகா பிரபுவின் மேல் உயிரையே வெச்சிருக்கா. அப்புறம் அவளால் எதையும் தாங்கிக் கொள்ள முடி யாது....''

''வாட் நான்ஸென்ஸ்... மத்த வங்க போலல்ல என் மருமகன் பிரபு. ஹி இஸ் எ ஜெண்டில்மேன்... ஸ்நேகாவை அவன் ஒரு நிமிஷம் பார்க்காட்டா துடி துடிச்சுப் போவான். பிரபு மேல் எனக்குப் பூரண நம்பிக்கை இருக்கு.''

அப்பா சொன்ன வார்த்தை ஸ்நேகாவுக் குப் பெரும் ஆறுதலாக இருந்தது.

அடுத்த நாள் விமான நிலையத்தில் பிர புவை வழியனுப்ப எல்லோரும் காத்திருந் தார்கள். விமானம் புறப்பட ஆயத்தமாகிக் கொண்டிருந்தது.



''சுநோ...! நான் வரட்டுமா?'' பிரபு காதருகே கிசுகிசுத்தான்.
சிநேகா விசுக்கென்று நிமிர்ந்து அவனைப் பார்த்தாள். நீர் அவள் விழிகளில் தொத்தி நின்றது.
''ஏய்... சுநோ! என்ன இது? இருபத்திரண்டு வயசுப் பெண்... அதுவும் ஒரு டாக்டர்.... இப்படியா சின்னக் குழந்தை மாதிரி அழறது? நான் எங்கே போறேன் அமெரிக்காதானே? ரெண்டு வருஷங்கறது ரெண்டு நாள் மாதிரி பறந்து போயிடும்... டோன்ட் பி ஸில்லி... கண்ணைத் துடைச்சுக்க... யாராவது பார்க்கப் போறாங்க.''
கர்ச்சீப்பை எடுத்து சிநேகாவின் கண்களைத் துடைத்தான் பிரபு.
அவள் சட்டென்று அவன் கையைப்பற்றிப் புறங்கையில் தன் சிவந்த இதழ்களைப் பூப்போலப் பதித்தாள்.
விமானத்தின் உடலுக்குள் நுழையும்வரை கையை ஆட்டிக் கொண்டு... கண்ணீரை உதிர்த்துக் கொண்டே இருந்தாள் சிநேகா.

ஒரு நாள் சிநேகாவின் தோழி ரேணுகா டிஸ்பென்சரிக்கு வந்திருந்தாள்.
''என்ன ரேணு? உடம்புக்கு ஏதாவது?''
''அதுக்கென்ன நல்லாத்தான் இருக்கு. சும்மா உன்னைப் பார்க்கலாம்னு வந்தேன். உனக்கு ஒரு விஷயம் தெரியுமா?''
''என்ன விஷயம் ரேணு?''
''எங்க வீட்டுக்கு எதிர் வீட்டிலே அமிதாப்பச்சன் உயரத்திலே ஒருத்தன்... அதான் சேகர்ன்னு ஒருத்தன் இருப்பானே? அவன் டாக்டர் படிப்புக்கு வெளி நாடு போனவன் வர்றப்போ ஒரு வெள்ளைக்காரக் குட்டியை இழுத்துக்கிட்டு வந்துட்டான்...''
''ஐயைய்யோ.....!''
''ஏண்டி இப்பக் கத்தறே? தாலி கட்டித்தான் கூட்டிக்கிட்டு வந்தான்....''
சிநேகாவின் நெஞ்சுக்குள் இடித்தது.
''ஏண்டி சிநேகா ஒரு மாதிரி ஆயிட்டே?''
''ஒண்ணுமில்லே ரேணு.... லேசாத் தலைவலி... கொஞ்ச நேரம் ஓய்வு எடுத்துக்கிட்டாச் சரியாப் போயிடும்....''
''அப்ப நான் வரட்டுமா சிநேகா?''
''ஓ.கே.''
சிநேகா மேஜையின் மேல் கவிழ்ந்து படுத்துக் கொண்டாள். சேகர் மாதிரி அத்தான் பிரபுவும் ஏதாவது....?
சீச்சி... என்ன அசட்டுக் கற்பனை....!

சட்டென்று ஸ்டீயரிங்கை ஒடித்துக் குறுக்குப் பாதையில் காரை ஓட்டினாள் சிநேகா.
அத்தானை ரெண்டு வருஷத்துக்கு முன்னால் பார்த்தது. அத்தான் அமெரிக்காவிலிருந்து எனக்கு என்ன வாங்கிக் கொண்டு வருவார்?
அழகான அமெரிக்கன் ஜார்ஜெட் புடவை, இல்லை, விலையுயர்ந்த லேடீஸ் வாட்ச்... புது மாதிரியான டேப் ரிக்கார்டர்....
சேகர் செய்து கொண்டதைப் போல்..· அத்தான் வேறு ஒரு பெண்ணை....?

சிநேகாவுக்கு மிகவும் பயமாக இருந்தது.

விரல்கள் ஸ்டியரிங்கின் மேல் லேசாக நடுங்கியது.

சட்டென்று பிரேக்கை மிதித்தாள் சிநேகா. கார் விமான நிலையத்தின் முன்னால் குலுங்கி நின்றது.

தாழ்வாகப் பறந்த விமானம் தரையில் இறங்கி.... சிறிது தூரம் ஓடி.... நின்றது.

பயணிகள் இறங்கிக் கொண்டிருந்தார்கள். சிநேகா கண்களில் மகிழ்ச்சி பறக்கப் பிரபுவைத் தேடினாள்.

பிரபு சிரித்தவாறே இறங்கினான்.

அவன் கூடவே வெள்ளை வெளேர் என்ற நிறத்தில்....

வெள்ளை முடி காற்றில் அலைய ஒரு இளம் பெண் சிரித்தவாறே ஓட்டி வந்தாள்.

பிரபு அவளுடன் சிரித்துப் பேசியவாறே இறங்கிக் கொண்டிருந்தான்.

சிநேகா பொடிப் பொடியாகச் சிதறிப் போனாள். அழுகை நெஞ்சுக்குள் கொதித்தது.

நீர் தேங்கிய விழிகளுடன் விமான நிலையத்துக்கு வெளியே ஓடி.... காரை ஒரு வெறியோடு ஓட்டினாள்.

பிரபு விமான நிலையத்தின் வெளியேயும் உள்ளேயும் சிநேகாவைத் தேடினான்.

மாமாவைத் தேடினான். கடைசியாக டிரைவரைத் தேடினான். உதட்டைப் பிதுக்கினான். சூட்கேஸைக் கீழே வைத்து விட்டுக் கையைத் தட்டினான். ''டாக்ஸி...!''

டாக்ஸி அவள் அருகில் வந்து நின்றது.

டாக்ஸி டிரைவர் பின் கதவைத் திறந்து விட்டான்.

''கமான் ரோஸலின்.... கெட் இன்....''

ரோஸலின் என்ற அந்த அமெரிக்க இளம் பெண் டாக்ஸியில் ஏறி அமர்ந்தாள்.

பிரபு சூட் கேஸுடன் அவள் அருகே அமர்ந்து கதவை இழுத்து அடித்துவிட்டுச் சொன்னான்.

''விவேகானந்தர் ரோடு....''

டாக்ஸி விரைந்தது.

சிநேகா நர்ஸிங் ஹோமின் முன்னால் கார் நின்றது. சிநேகா எதையும் லட்சியம் செய்யாமல் நர்ஸிங் ஹோமுக்குள் நுழைந்து தன் பெர்சனல் ரூமுக்குள் சென்றாள்.

கதவைச் சாத்தினாள்.

நாற்காலியில் அமர்ந்து மேஜை மேல் தலையைக் கவிழ்த்துக் கொண்டு சிறிது நேரம் குலுங்கிக் குலுங்கி அழுதாள். பிறகு வரிசையாக இருந்த மருந்துப் பாட்டில்களில் ''ஸ்லீப்பிங் பில்ஸ்'' என்ற பாட்டிலை எடுத்தாள். கண்ணாடிக் கூஜாவிலிருந்து தண்ணீரை டம்ளரில் நிறைத்தாள்.

மாத்திரை கையில் நிறைந்திருந்தது.

''அத்தான்! என்னை மறந்துட்டு நீங்க சந்தோஷமா வாழலாம். ஆனா உங்களை இழந்துட்டு ஒரு நிமிஷம் கூட என்னால் உயிரோடு இருக்க முடியாது. என்னால் இதைத் தாங்கிக்க முடியலே அத்தான்.... என்னை மன்னிச்சிருங்க.

''நீங்க சந்தோஷமா இருக்கணும்.''

அதுதான் என் ஆசை....''

பட்டென்று தூக்க மாத்திரைகளை வாயில் கொட்டி,

தண்ணீரை ஊற்றினுள்.

தண்ணீரில் தூக்க மாத்திரை கரைய ஆரம்பித்தது.

டாக்ஸி நின்றது.

டாக்ஸியிலிருந்து இறங்கி டிரைவருக்குப் பணத்தைக் கொடுத்துவிட்டுப் பங்களாவினுள் நுழைந்தான் பிரபு.

வேலைக்காரன் ஓடிவந்து சூட்கேஸை வாங்கிக்கொண்டான்.

''என்ன பிரபு நீ மட்டும் தனியா வர்றே? சிநேகா எங்கே!'' என்றார் சிவசங்கரன்.

''என்ன மாமா சொல்றீங்க?''

''உன்னை ரிசீவ் பண்றதுக்கு பிளேட் வர்றதுக்கு ஒரு மணி நேரத்துக்கு முன்னாடியே சிநேகா ஏர்போர்ட்டுக்கு வந்தாளே?''

''யாரும் வரலையே மாமா!''

''ஒருவேளை ஏதாவது அவசரக்கேஸுன்னு டிஸ்பென்சரிக்குப் போயிட்டாளோ என்னவோ? நீ ஏன் இவ்வளவு லேட்டு?''

''அமெரிக்காவிலே எனக்கு ஒருத்தர் பிரண்ட் ஆனார். அவரோட தங்கை ஒரு எழுத்தாளர். பெயர் ரோஸலின். அவர் ஒரு ஆறு மாதம் இந்தியாவில் தங்கி இந்தியர்களின் பழக்க வழக்கங்கள், சம்பிரதாயங்கள், இன்னும் சில ஆதாரங்களைச் சேகரிச்சு இந்தியக் கலாசாரத்தைப் பத்தி ஒரு புத்தகம் எழுதப் போறாங்களாம். விவேகானந்தர் ரோட்டில இருக்கிற அவங்க சொந்தக் காரங்க வீட்டிலே டிராப் பண்ணிட்டு இப்படியே வரேன்.''

''சரி.... களைப்பா இருப்பே... முதல்லே போய்க் குளி.''

''இல்லே மாமா நான் டிஸ்பென்சரிக்குப் போயிட்டு வர்றேன்....''

சிவசங்கரன் லேசாகச் சிரித்தார்.

''பிரபு... சிநேகாவைப் பார்க்கணும்னு உனக்கு எவ்வளவு ஆசையும் ஆர்வமும் இருக்கோ அதே போல அவளும் உன்னைப் பார்க்கத் துடிச்சுக்கிட்டு இருப்பா. முதலில் நீ போய்க் குளி. சிநேகா சீக்கிரம் வந்துடுவா....''

பிரபு மாடி ஏறினுன்.

சிநேகா இந்நேரம் டிஸ்பென்ஸரியிலிருந்து புறப்பட்டிருப்பாளோ?

இந்திய மண்ணில் காலடி எடுத்து வைக்கும்போது முதன் முதலில் சிநேகாவின் முகத்தைப் பார்க்க எவ்வளவு ஆசை!

'சிநேகா அமெரிக்காவிலிருந்து உனக்கு என்ன வாங்கிக் கொண்டு வந்திருக்கிறேன் தெரியுமா?' என்று கேட்க வேண்டும்.

'என்ன வாங்கிக் கொண்டு வந்திருக்கிறீர்கள்?' என்று சிநேகா கேட்பாள்.

'நீயே சொல்லு பார்க்கலாம்?' என்று கூற வேண்டும்.

சிநேகா ஒவ்வொன்றாகச் சொல்லுவாள். எல்லாவற்றையும் மறுக்க வேண்டும்.

''நீங்களே சொல்லுங்கள்'' என்று சிநேகா சிணுங்கிக் கொஞ்சுவாள்.

''நேரில் வா... சொல்கிறேன்'' என்று சொல்ல வேண்டும்.

பிரபு டெலிபோனை நெருங்கினுன். ரிஸீவரைக் காதில் வைத்து வெகு சந்தோஷத்துடன் எண்களைச் சுழற்றினுன்.!

---

## மாசி பங்குனி நோன்பு

அதிகாலை எழுந்து ஸ்நானம் செய்துவிட்டு, நான், என் கணவர், என் நாத்தனார் என் குழந்தைகளுடன் ஸ்வாமிகளைத் தரிசிக்கத் தாம்பரத்திலிருந்து கலவை சென்றோம். நாங்கள் எடுத்துச் சென்ற பழங்கள், புஷ்பங்கள் இவற்றைத் தட்டுடன் அளித்து ஆசீர்வாதத்துக்காக நமஸ்கரித்தோம். உடனே அவர் அந்தத் தட்டில் எதையோ தேடினார். 'என்ன குற்றம் செய்து விட்டோம்' என்று நாங்கள் பயந்து நடுங்கினோம். அப்போது பெரியவாளின் உதவியாளர் ''என்னம்மா இன்று இரவு மாசி-பங்குனி நோன்பாயிற்றே. சரடுகளைக் கொண்டு வரவில்லையா? பெரியவாள் ஆசீர்வாதம் பண்ணுவதற்காக அதைத் தட்டில் தேடுகிறார்'' என்று கூறினார். உடனே அதிர்ச்சியாகி விட்டது. இவ்வளவு பெரிய விஷயத்தை நாம் மறந்து விட்டோமே, பெரியவர் எவ்வளவு ஞாபகமாக அதை ஆசீர்வதிப்பதற்காகத் தேடினார் என்றும் நினைக்கையில் எங்களுக்கு மிகவும் வெட்கமாகப் போய்விட்டது. அங்குள்ள மடத்தில் சரடுகள் கொடுக்கிறார்கள் என்று அறிந்து வாங்கி வந்து அவரிடமே ஆசீர்வாதம் பெற்றுக் கொண்டு மிகவும் சந்தோஷமாகவும் நிறைந்த மனத்துடனும் வீட்டுக்கு வந்து அன்று முதன் முதலாக நோன்பு செய்தோம். அப்போதிருந்து எனக்கு எதுவும் நன்மையாகவே நடக்கிறது.



இன்னும் எவ்வளவோ நோன்பு செய்யப் போகிறோம். இருந்தாலும் பெரியவாளின் ஆசியுடன் ஆரம்பமான அந்த முதல் நோன்பை மறக்க முடியுமா?

—எல். சுதா




## 24. ஆகாவென்றெழுந்தது பார்!

ஊர்களுக்கும் தெருக்களுக்கும் பெயரை மாற்றுவதென்பது புரட்சிக்குப் பிறகு ரஷ்யாவில் கண வேகமாக நடந்தது. அப்படி மாற்றப்பட்ட பெயர்தான் 'லெனின் கிராட்'

ஜார் நிக்கோலஸ் காலத்தில் அதன் பெயர் 'செயின்ட் பீட்டர்ஸ் பர்க்'. சோவியத் யூனியனின் முக்கியமான நகரங்களில் அது ஒன்று.

அங்குள்ள மக்கள் பைலோ ரஷ்ய மக்களைப் 'போல வெள்ளை நிறம் கொண்டவர்களாக இல்லை. அவர்கள் முகத்தில் ஆசியாவின் மெருகு இருந்தது.

இரண்டாவது உலக மகா யுத்தத்தில் கடும் பாதிப்புக்கு ஆளானது லெனின் கிராட். ஹிட்லர் இதைத்தான் நீண்ட நாட்கள் முற்றுகை இட்டான்.

யுத்தத்தில் செத்தவர்கள், பசி பட்டினியில் செத்தவர்கள் எண்ணிலடங்கா! ஒவ்வொரு வீட்டிலும் ஒவ்வொரு மரணம் நிகழ்ந்திருக்கிறது. ஆயினும் இப்போது அது கம்பீரமாக எழுந்து நிற்கிறது.

அவர்கள் தங்குவதற்குப் பன்னிரண்டு மாடி ஹோட்டல் ஒன்றில் ஏற்பாடு செய்திருந்தார்கள். எட்டாவது மாடியில்விஸ்வநாதனுக்கும் அவனுக்கும் அறை.

ஹோட்டல்களைப் பொறுத்தவரையிலாவது சோவியத் சர்க்கார் வெளிநாட்டாரைக் கவரும் முறையில் நடந்து கொள்ளலாம். சாப்பாட்டு வசதியே இல்லாத ஹோட்டல்கள். இரவு ஒன்பது மணிக்கெல்லாம் 'லிப்டை' நிறுத்திவிடுகிறார்கள். பத்தாவது மாடிக்காரன் கீழே இறங்கியிருந்தால் செத்தான்.

அப்படி அவன் ஒரு தடவை மாட்டிக் கொண்டான்.

கீழே இறங்கி, வறட்டு ரொட்டியும், 'கோனியாக்' பிராந்தியும் வாங்கிக் கொண்டிருந்தபோது, ஹோட்டல் கதவு சாத்தப்பட்டு, லிப்டு நிறுத்தப்பட்டு விட்டது. சுற்று வட்ட மாடிப் படிக்கட்டில் எட்டாவது மாடியில் நின்று விசுவநாதன் கத்தினான். அவன் கீழே இருந்து மெது மெதுவாக ஏறி எட்டாவது மாடியை அடைந்து விட்டான்.

அங்கே ஒவ்வொரு மாடியிலும் டீ சாப்பிடும் சென்டர் வைத்திருக்கிறார்கள்.

ஒரு மாடியில் இரண்டு ஜெர்மன்பெண்கள் நின்று அவனிடம் காமரஸக் கேள்விகள் கேட்டார்கள். சோவியத் யூனியனில் இது அவனுக்குப் புதிய அனுபவமாக இருந்தது.

ஆண்-பெண் உறவு பற்றிய தாகம் எங்குமே இருக்கிறது. என்ன தடை விதித்தாலும் ஒரு கட்டத்தில் அது மீறிவிடுகிறது. அதுவும் குளிர்ப் பிரதேசத்தில் இருப்பவர்கள் உஷ்ணப் பிரதேசிகளான இந்தியர்களை மிகவும் விரும்புகிறார்கள். ஆனால் மூலைக்கு மூலை ஒற்றர்கள் நிற்பது போல் பீதி நிலவுகிறது.

மறுநாள் இரவு எட்டு மணிக்கு அவன் கீழே இறங்கித் தெருவில் நடந்து பார்த்தான். ஒரு நகரத்துக்கான சந்தடியே இல்லை.

சர்க்கஸ் பார்க்க அழைத்துச்சென்றார்கள். கூட வந்தவர் ஒரு பெண் மந்திரி. அம்பிகாபதி கோட்டுப் போடவில்லை. அவரையும், அவனையும் தன் கோட்டுக்குள்ளேயே திணித்துக்கொண்டார் அந்தப் பெண் மந்திரி.

உலகத்திலேயே சர்க்கஸில் ரஷ்யர்களை மிஞ்ச எவனாலும் முடியாது. அந்த நாட்டு நாய் செய்கிற வேலையை மற்ற நாட்டு



✠ மாஸ்கோ



## நிருத்திய பார்வை

இன்ஜினியர் ஒருவர் சம்சாரத்துடன் வந்து தங்களுடைய பிக்ஷையை ஏற்றுக்கொள்ள வேண்டுமென்று காமகோடி பெரியவாளிடம் பிரார்த்தித்துக் கொண்டார். பெரியவாள் அவருடைய பெற்றோர்களைப் பற்றி விசாரித்து, அவர்கள் ஏன் வரவில்லையென்று கேட்டார். தன் தகப்பனார் பிரபல அட்வொகேட், ஏராளமான வரும்படி உள்ளவர். ஆனால் நாஸ்திகர், நடவடிக்கைகளும் சரியில்லை மடத்துக்கு வர மாட்டார் என்றார். பெரியவாள் அந்த இன்ஜினியரிடம் பணம் உன் சம்பாத்தியமானாலும் பெற்றோர்களை வைத்துக்கொண்டு செய்வதுதான் நல்லது, குடும்பத்துக்கும் க்ஷேமம் என்றார் அதன் படியே ஒருவாரம் கழித்துப் பெற்றோர்களை அழைத்து வந்தார்.

தகப்பனார் பேண்டும் செருப்பும் போட்டுக் கொண்டு பெரியவாள் எதிரில் வந்து குட் மார்னிங் ஸார்! என்று சொல்லி மரமாய் நின்றார்.

பிறகு ரொம்ப சிரமப்பட்டுப் பையனும் தாயாரும் அவரை ஸ்நானம் பண்ணச்சொல்லி, பஞ்சகச்சம் கட்டச்சொல்லி, பாதபூஜை , பண்ணும் பையன் பக்கத்தில் உட்கார வைத்து பிக்ஷா வந்தனம் செய்தார்கள். பிறகு எல்லோரும் பிரஸாதம் வாங்கிக்கொண்டு சென்றார்கள்.

ஒருவாரம் கழித்துத் தம் பத்தினியுடன் அட்வகேட் தகப்பனார் பெரியவாளுக்குத் தம் பிக்ஷையைச் செய்தார். தாம் பிராமணனாகி விட்டதாகவும் குடி, புகை பிடிப்பது எல்லாம் அடியோடு விட்டு விட்டதாகவும் சத்தியம் செய்தார்.

பெரியவாள் அவருக்கு ஒரு உபதேசமும் செய்யவில்லை. அவர் நடவடிக்கைகளைப் பற்றி ஒன்றுமே கேட்காமலிருந்தும் பெரியவாளுடைய கடாக்ஷத்தினாலேயே சுத்தப்பிராமணனாகத்திருந்தியது மல்லாமல், மாதாமாதம் ஆசாரியாள் தரிசனம் தவறாமல் செய்து வந்தார். சகோதர வக்கீல்கள் பரிகாசம் செய்ததையும் சந்தோஷமாக ஏற்றுக்கொண்டார். ஹரஹர சங்கரா, ஜெய ஜெய சங்கரா என்று பெரியவாள் படத்தை வைத்துத் தினம் வீட்டில் பஜனை செய்தார். அந்த மாற்றத்தைக் கண்டு ஊரே ஆச்சரியப்பட்டது.

- வி. எஸ். வேங்கட்ராமய்யர்

மனிதன் செய்ய இயலாது. அந்த சர்க்கஸையும் அவன் முழுமையாகப் பார்க்கவில்லை. 'ஹோட்டலுக்குப் போகலாம்' என்று அரித்தெடுத்தான். ரெக்டாருக்கு மிகவும் வருத்தம்.

பெண் மந்திரிக்கு ஒரு கவலை. ஒன்பது மணிக்கு வரச் சொல்லிக் காரை அனுப்பி விட்டார். பிறகு வேறு வழியின்றி பஸ்ஸில் ஏற்றிக் கொண்டார்.

கண்டக்டர் இல்லாத பஸ்; கள்ளத்தனம் இல்லாத பிரயாணிகள்.

மறுநாள் ஒரு பிரம்மாண்ட தியேட்டரில் நாடகம். அது போன்ற தியேட்டர் இந்தியாவில் இல்லை. மாடியில் உட்கார்ந்து பார்த்தால் மயக்கம் வரும். அதையும் பாதி தான் பார்த்தான் அவன்.

எல்லா நிகழ்ச்சிகளுக்கும் அவர்களுடன் வந்தவர், 'செபாஸ்டின் ரூடின்' என்ற தமிழ் அறிஞர்.

மறுநாள் கூட்டுப் பண்ணைகள், பல்கலைக் கழகம், மேயர் வரவேற்பு.

பிறகு மாஸ்கோவுக்கு வந்தார்கள். மாஸ்கோவில் அவர்கள் கௌரவ விருந்தாளிகள் தான். அதனால் கவனிப்பே இல்லை. நல்லவேளையாக திரு பூரணம் விசுவநாதன் தம்பி பூரணம் சோமசுந்தரமும், நாஞ்சில் மணிவர்மனும் மாஸ்கோ வானொலியில் தமிழ்ப் பிரிவில் இருந்தார்கள். அவர்களுக்கு வேண்டிய வசதிகளை அவர்கள் செய்து கொடுத்தார்கள். அம்பிகாபதிக்கு பூட்ஸ், கோட்டு எல்லாம் கொண்டு வந்து கொடுத்தார்கள். இரண்டு பேருமே ரஷ்யப் பெண்களைத் திருமணம் செய்து கொண்டிருக்கிறார்கள்.

சோமசுந்தரத்தின் மனைவிக்குத் தமிழ்ச் சமையல் தெரியாது. சோமசுந்தரமே அற்புதமாகக் கோழிக் கறி சமைத்தார்.

இருபது நாட்களுக்குப் பிறகு தமிழ் நாட்டுச் சமையல்! மூன்று மணிக்குச் சாப்பிட உட்கார்ந்த அவன் நாலே கால் மணிக்குத் தான் எழுந்தான்!

அவனை வானொலியில் பேசவைத்துப் பணம் வாங்கிக் கொடுத்தார்கள், சோமசுந்தரமும் மணி வர்மனும்.

மாஸ்கோவில் இருந்து திரும்பும்போது ஜெர்மனி வழியாக ஒரு விமானம் வருகிறது. அதில் ஜெர்மனி செல்ல வேண்டும் என்று துடித்தான் விசுவநாதன். எங்களிடம் அதற்கான டிக்கெட் இல்லை. ஆகவே டெல்லி வந்து இறங்கினோம்.

டெல்லியில் இஸ்கஸ் நண்பர்கள் வரவேற்றார்கள்.

ரஷ்யாவில் குடித்த 'வோட்கா' டெல்லியில் வேலை செய்ய ஆரம்பித்தது. சிறுநீர் அரக்கு மஞ்சளாகப் பிரிந்தது. அடிவயிறு வலித்தது; நெருப்பாகக் கொதித்தது. டெல்லி ரீட்ஸ் ஹோட்டலில் அவன் துடியாய்த் துடித்தான்.

மாஸ்கோ குளிருக்கு ஒத்துக்கொண்ட வோட்கா இந்திய நிலைக்கு ஒத்துக்கொள்ளவில்லை.

—இவ்வளவையும் அவன் ஜெயகாந்தனுக்குச் சொல்லிக் கொண்டே வந்தான். அவரும் இடையிடையே 'ஜோக்' அடித்தபடி கேட்டுக் கொண்டே வந்தார்.

சோவியத் பயணத்தை விட, நாகர்கோவில் பயணம் சுவையாக இருந்தது.

நேரே கன்னியாகுமரி வீட்டுக்கே வந்து விட்டார்கள்.

மனிதன் நல்ல பதனீர் சாப்பிட வேண்டுமென்றாலும், மீன் வர்க்கம் சாப்பிட வேண்டுமென்றாலும் கன்னியாகுமரி மாவட்டத்துக்குத்தான் போக வேண்டும். அதிகாலையில் பனை ஓலையில் அந்தப் பதநீரைச் சாப்பிடுவது அற்புதம்!

''இந்தப் போர்க்களத்தில் கருணாநிதியும் ஆதித்தனும் சரியாக வந்து சிக்கிக் கொண்டிருக்கிறார்கள். சும்மா விடக் கூடாது என்று கங்கணம் கட்டிக் கொண்டான் அவன்.

நாகர்கோவில் நகரமும், சுற்று வட்டக் கிராமங்களும் ஜேஜேவென்றிருந்தன. காங்கிரஸ்காரர்கள்தான் கண்ணுக்குத் தெரிந்தார்கள். எட்டு வயதுச் சிறுவன் கூடக் காமராஜரை 'அப்பச்சி அப்பச்சி' என்று அன்பொழுக அழைத்துக் கொண்டிருந்தான். ஒவ்வொருவரும் மார்புச் சதையிலேயே ஊக்கைக் குத்திக் காமராஜர் படத்தைத் தொங்க விட்டுக் கொண்டிருந்தார்கள்.

அற்புதமான படை வீரர்களைக் கண்டு விட்ட தளபதி போல் அவன் ஆனந்தக் கூத்தாடினான்.

தி. மு. க.வினர் டாக்டர் மத்தியாஸை ஆதரித்ததும், தெருவில் தலை தூக்கி நடமாட முடியவில்லை.

நூற்றுக்கு எழுபது பேர் காமராஜரிடம் உயிரை வைத்திருந்ததால், எதிரிகள் வெளிப் படையாக எதையும் செய்ய முடியவில்லை. மறைந்திருந்து தாக்குவது அதிகமாக இருந்தது. அதிகாரத்தைப் பயன்படுத்தி, பயணிகள் விடுதியை எடுத்துக் கொண்டு அதையே தங்கள் முகாமாக ஆக்கிக் கொண்டார்கள் கருணாநிதியும், ஆதித்தனும்.

தி. மு. க. வண்டிகள் கிராமங்களுக்குள் செல்ல முடியவில்லை. கொடியை எடுத்து விட்டுத்தான் இரவில் கூடச் செல்ல முடிந்தது!

எதிரி சுத்தமான வீரனாக இருந்தால், தன் தோல்வியை அப்போதே ஒப்புக்கொண்டிருப்பான். ஆனால் தி. மு. க.வுக்கு அந்த நாகரிகம் கிடையாதே?

வெளியூர்களில் உள்ள தோழர்களையும் நாகர்கோயிலுக்கு வரும்படி அவன் நவசக்தியில் எழுதிவிட்டான்.

கருணாநிதிக்கு இது ஒரு பிரச்னையாகி விட்டது. 'எந்த லாரியையும், பஸ்ஸையும் உள்ளே அனுமதிக்க வேண்டாம்' என்று அவர் போலீசுக்கு உத்தரவிட்டார். அதை சி. சுப்பிரமணியமும், கருத்திருமனும் ஆதரித்து விட்டார்கள்.

அவன் உடனே போலீஸ் அதிகாரியிடம் போய், அவரைக் கடுமையாக எச்சரித்தான். சி. சுப்பிரமணியத்தையும், கருத்திருமனையும் சந்தித்துக் கோபமாகப் பேசிவிட்டான். பிறகு நாகர் கோயில் எல்லையில் தடுக்கப்பட்டிருந்த பஸ்களை விடுவிப்பதற்காகச் சென்றான்.

அங்கே ஒரு போலீஸ்காரர் அவனைக் கண்டதும் துப்பாக்கியை எடுத்தார். அவன் ஆத்திரம் மிகுந்து, ''துப்பாக்கியையா எடுக்கிறீர்கள்? இந்த நாகர் கோவில் மண்ணிலேயே உங்களுக்குச் சமாதி வைப்போம்'' என்று கத்தினான்.

ஒரு கிராமத்து அருகில் தேசியக்கொடியை ஒரு போலீஸ்காரர் கட்டு விட்டார் என்று கேள்விப்பட்டு,. பன்னிரண்டு கார்களோடு அங்கே சென்று ஆர்ப்பாட்டம் செய்தான்.





**கண்ணீர் மல்கிய கரியப்பா!**

ஒரு சமயம், ஜெனரல் கரியப்பா, ஸ்ரீ பெரியவாளைத் தரிசிக்கச் சுவாமிகள் முகாமிட்டிருந்த கலவைக்குச் சென்றார்.

இருவரும் கன்னட மொழியில் இதையைப் பற்றி பேசிக்கொண்டே வந்தார்கள். கடைசியில் கரியப்பா இரு கைகளையும் கூப்பிப் பெரியவர்களை வணங்கிக் கொண்டே சொல்கிறார்: ''சுவாஜீ! நான் பல சண்டைகளைப் பார்த்திருக்கிறேன். யுத்த காலத்தில் பல இறந்த உடல்களின் மீது இரவு, பகல் பாராது நடந்திருக்கிறேன். அப்போதெல்லாம் நான் எதற்கும் பயந்ததே கிடையாது. ஆனால், தங்கள் சன்னதியில் நிற்கும்போது பயத்தினாலும், தங்கள் மீதுள்ள பக்தியினாலும், மரியாதையினாலும் என்னால் சரியாகப் பேசவே முடியவில்லை.'' இப்படி கண்களில் கண்ணீர் மல்க, கூப்பிய கை நடுங்கியவாறு கூறி நின்றார். ஸ்ரீ பெரியவர்கள் கரியப்பாவைப் பார்த்தவாறே புன்னகையுடன் நின்று அவரை அனுக்ரகித்தார்கள். - வி. மீனாட்சிசுந்தரம்

ஐந்து ஊர்களில் திறந்த வெளியரங்கில் நாடகமும் போட்டான்.

தலைவர் காமராஜரும், ''அவன் இஷ்டத்துக்கு விட்டு விடுங்கள்'' என்று கூறி விட்டார்.

'அன்று நாகர்கோவிலில் இருந்த காங்கிரஸை இன்று காணோமே' என்று ஏங்குகிறான்.

அந்த எழுச்சியும், அந்த அன்பும் மறக்க முடியாதவை.

தமிழ் நாட்டிலேயே அழகான மாவட்டம் கன்னியாகுமரி. சலசலக்கும் ஓடைகளும், தென்னந் தோப்புக்களும், மாந் தோப்புகளும் — இழைத்துப் போட்ட கவிதை வரிகளைப் போல் சிதறிக் கிடக்கின்றன. அது தேசியத்துக்குத் தரும் ஆதரவை, தேசியக் கொடி பறக்கும் வரையில் மறக்க முடியாது.

(வளரும்)



"அன்னை பராசக்தி "அங்காள பரமேஸ்வரி தாயே துணை"

சேலம் சித்த வைத்தியர்

# டாக்டர் S. R. சிவராஜ்

அவர்களின் சாதனை

**சிவராஜ் சித்த வைத்தியசாலையில் தயாராகும் மருந்துகள், பிணிகளை நீக்கவும், புத்துயிரளிக்கவும் பெரிதும் உதவுகிறது**

○ குழந்தை பாக்கியம் (கெர்ப்பணுக்கள்) இல்லாதவர்கள், ○ ஆண்மை வீரியம் இல்லாமல் பலஹீனமடைந்தவர்கள், ○ வாலிபத்தை வீணாக்கி, சக்தி இழந்தவர்கள், பயமுள்ளவர்கள் ○ கல்யாணம் செய்யப் பயந்து காலம் கடத்தி வருபவர்கள், ○ அதிக உஷ்ணம் — கண் எரிச்சல் — தூக்கமின்மை — உடல் வலி, ○ நரம்புத் தளர்ச்சி — உடலுறுப்புக்கள் தளர்ச்சி — நடுக்கம், ○ மற்றும் உங்கள் ரகசிய வியாதிகளுக்கும்

நாள்பட்ட ஆஸ்தமா — இளைப்பு — இருமல் — தும்மல் — மூக்கடைப்பு — பீனிசம் — ஈஸினோ பிலியா — இருதய வலி — படபடப்பு — அள்ளை விலாவைத் தூக்கி தூக்கி மூச்சு வாங்குதல் — கோழை கட்டு, பனி, மோடம், மழை காலங்களில் ஏற்படும் இளைப்பு — கர் முர்ரென்று மேல் மூச்சு போன்ற கப வியாதி பித்தத்தினாலும், வாய்வுனாலும் ஏற்படும் மலச்சிக்கல் — மலக்கட்டு, வயிற்றுவலி — குடல் புண் — பித்த மயக்கம் — தலைவலி — தலைபாரம் நாள் பட்ட ஒரு தலைவலி—கண் பார்வையில் பூச்சி பறப்பது போலிருத்தல் பசியின்மை — பொருமல் — வயிறுப்புசம் — காமாலை — சோகை — இரத்தக்குறைவு மேகத்தினாலும் — தொத்து வியாதியினாலும், விஷப்பூச்சிகள் கடியினாலும் ஏற்படும் சரும நோய்கள்—படைகள்—ஊறல் —அரிப்பு - கருநிற, செந்நிற படைகள் — செதில்களாக உதிரும் கிரந்தி படைகள் — வெண் மேகம், பாதவெடிப்பு — பனி வெடிப்பு முதலான நோய்கள். பெண்களுக்கு ஏற்படும் சகலவித நோய்கள். மேலே குறிப்பிட்ட வியாதியஸ்தர்கள் எமது பிரதம டாக்டரை

◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇ ❖ **சென்னையில் கீழ்க்கண்ட இடங்களில்** ❖ ◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇

சந்தித்து வைத்திய ஆலோசனை பெறலாம்

கீழ்க்கண்ட தங்குமிடங்களில் எமது கிளை அலுவலகத்தில் எமது மருந்துகள் கிடைக்கும்

கிளை வைத்தியசாலை

**சென்னை - 1**

தேதிகள் : 1, 2, 3 தேதி வரை

பிரதம வைத்தியர்

**ஹோட்டல் ரோலக்ஸ் ரூம் நெ. 5ல்**

போன் : 24236

(190 N S C போஸ் ரோடு (எசனு பஜார்)

(பூக்கடை — டெலிபோன் ஆபீஸ் எதிரில்)

சென்னை - 1

பார்க்கும் நேரம்: காலை 8 மணி to இரவு 8 மணி

கிளை வைத்தியசாலை

**சென்னை - 2**

தேதிகள் 4ந்தேதி முதல் 10ந்தேதி வரை

பிரதம வைத்தியர்

**ராமச்சந்திரா லாட்ஜ் ரூம் நெ. 3ல்**

போன் : 846526

7, அத்திப்பட்டன் தெரு மவுண்ட் ரோடு

PORR & சன்ஸ் — பெட்ரோல் பங்க்

மேற்குபுரம், சென்னை-2

காலை 8 மணி முதல் இரவு 8 மணி வரை

**ஆலோசனை கட்டணம் ரூ. 10-00 ❖ சிகிச்சைக் கட்டணம் தனி**

எமது கேட்லாக் வேண்டுவோர் ரூ. 1-00 ஸ்டாம்ப் அனுப்பியோ; M.O. செய்தோ பெறலாம்

**எமது உயர்ந்த — விசேஷ — ஸ்பெஷல் மருந்துகள் கிடைக்கும்**

| உயர்தர சிகிச்சை 1 மாதம் | | | ★ விசேஷ சிகிச்சை 1 மாதம் | | | ★ ஸ்பெஷல் சிகிச்சை 1 மாதம் | | |
|---|---|---|---|---|---|---|---|---|
| A வகுப்பு | B வகுப்பு | C வகுப்பு | A வகுப்பு | B வகுப்பு | C வகுப்பு | மீடியம் | ஸ்பெஷல் | 1 நெம்பர் |
| 1500-00 | 750-00 | 500-00 | 400-00 | 300-00 | 200-00 | 175 00 | 150-00 | 115-00 |

ஹெட்டாபீசுக்கு லெட்டர் எழுதி V.P.P. மூலமும் பெறலாம். தேவையான சிகிச்சைக்கு டிராப்ட் மூலம் (பேங்க் ஆப் இந்தியா) வாங்கி அனுப்பினால் ரிஜிஸ்டர் பார்சல் மூலம் பெறலாம். டாக்டர் S. R. சிவராஜ் ஹெட்டாபீஸில் 11, 16, 17, 18, 19, 20, 27, 28, 29, 30 தேதிகள் வரை சந்திக்கலாம். மற்ற நாட்களில் வெளியூரில் இருப்பார்.

## H.O. சிவராஜ் சித்த வைத்தியசாலை

சென்ட்ரல் டாக்கீஸ் வடபுரமுள்ள ஏரியில் **சேலம் — 636007**



# தில்லு முல்லு

என்ன மிஸ்டர் பாலசந்தர், நானும் தெரியாமல்தான் கேட்கிறேன். இது என்னய்யா தில்லு முல்லு? அவனவன் விலைவாசி உயர்வால் அவதிப்படுகிருன்; சட்ட மன்றத்தில் செருப்புப் பறக்கிறதே என்று வேதனைப் படுகிருன், அரசியல் கொலைகளும் லஞ்ச லாவண்யங்களும் அதிகரித்துக் கொண்டே போகிறதே என்று கவலைப்படுகிருன். இந்தச் சமயத்தில் நீர்பாட்டுக்கு எல்லாரையும் வயிற்றைப் பிடிச்சுக்கிட்டு சிரிக்க வைச்சுக்கிட்டிருந்தால் என்ன அர்த்தம்? படத்தைப் பார்த்துவிட்டு வந்து நாலு நாள் ஆவுது. இன்னமும் உமது தில்லு முல்லுவை நினைத்து நினைத்து உள்ளத்தில் உற்சாகம் தளும்புகிறதேயன்றி யதார்த்த உலகுக்கே மனசு திரும்ப மாட்டேங்குது. இதைவிடப் பெரிய உலக மகா மோசடி என்ன ஒய் இருக்க முடியும்?

போதாக் குறைக்கு உமக்குத் திரைக் கதை வசனம் எழுத ஒரு விசு அகப்பட்டார் பாரும்! விநாயகரையும் முருகனையுமே தமது தில்லு முல்லுவில் சம்பந்தப்படுத்துகிற ஃபிராட் நெம்பர் ஒன்! பின்ன என்னய்யா, நல்ல சுத்தமான நகைச்சுவை எழுதியே மக்களைக் கவர முடியும்னு நிரூபிச்சுக்கிட்டிருந்தால் இரட்டை அர்த்தத்தையே நம்பி வாழ்ந்துக்கிட்டிருக்கிற வசனகர்த்தாக்கள் கதி என்ன ஆவது?

அதுதான் போகட்டும் என்ருல் ரஜனி வேறு உங்க ஜகஜ்ஜாலப் புரட்டுக்களுக்குத் துணை நிற்கிருர். ரஜனி ஸ்டைல்னு ஒரு இமேஜை உருவாக்கிட்டு அதும்படி நடிச்சாத்தான் எடுபடும்னு நினைச்சு முரட்டுக் காளையை அனுகும்போதுகூட கராட்டே மூவ்மெண்ட் காட்டியவர் இப்பத் திடீர்னு வித்தியாசமா நடிக்க முடியும். இயல்பா, சிறப்பா செய்து காட்ட முடியும்னு ஆரம்பிச்சா எப்படி? ''அவர் நடிப்பு = மீசை''ன்னு வைச்சுக்கிட்டால் எது இயல்பான மீசை-எது ஒட்டவைச்ச மீசைன்னே புரிய மாட்டேங்குது, போங்க!

சௌகார், தேங்காய், பூர்ணம் எல்லாருமே வெறும் ஹம்பக்தான்!ஏன்னு கேளுங்க. துணை கேரக்டர்கள் துணை கேரக்டர்களா இருக்கணும். அவங்க மெயின் கேரக்டர்களையே முழுங்கிடற மாதிரி நடிச்சா தமிழ் திரையுலகு ஒப்புக்க முடியுமா? அப்புறம் ஸ்டார் வேல்யூங்கிற மாயைக்கு ஜன்னி கண்டுவிடாதா? அப்ப பூர்ணமா வருவார் வைத்தியம் பண்ண?

கண்ணதாசன், எம். எஸ். வி., வாணி, எஸ். பி. பி., மலேசியா, அப்புறம் அந்தச் சோட்டா (கட்டபொம்மன்) சந்திரசேகர், காமிரா லோக்நாத் எல்லோரும் சேர்ந்து ஒரேயடியா டபாய்க்கிருங்க, ஒரு 'தம்' அடிக்கக் கூட அஞ்சு நிமிஷம் எழுந்து போக விடாம ரசிகர்களை ஸீட்டில் கட்டிப்போட்டு வைச்சு....சே, ரொம்ப மோசம்!

பாப்பா முதல் கிழவன் வரை எல்லாரையும் ஒரு படம் சுண்டி இழுக்குதுன்ன அது என்ன ஜாலக்குன்றேன்?

மொத்தத்திலே தில்லு முல்லு இல்லாத ஒரே விஷயம் மூலக் கதை கோல் மால்னு ஒத்துக்கிட்டிருக்கிங்களே அது ஒண்ணுதான்!

- குட்டி கிருஷ்ணன்





20. இனியாவுடைய கல்யாணம்!

“உட்காருங்க உஸ்தாத்'' என்றான் வஸந்த்.

சரியான அடிபட்டிருந்த அவ்விருவரும் மாரத்தான் ஓடிவந்தவர்கள் போல இரைத்தார்கள். ''சொல்லுங்க. எதுக்கு வந்தீங்க?''

''சத்தியமா எங்களுக்குத் தெரியாது!''

''கேள்வி கேட்க மட்டும் தெரியுமா? பதில் சொல்லத் தெரியாதா?.... இதபார் என்ன எழவுடா உம்பேரு? அடிக்க வந்தியா?... அவ்வளவு சுலபமா அடிச்சுட்டுப் போக முடியுமா? இவரு யாரு தெரியும் இல்லே?... உங்க மாதிரி நூறு பேடிகளைச் சமாளிச்சுட்டு இருபத்தி அஞ்சு வாரமா ஹவுஸ் ஃபுல்லா ஓடிக்கிட்டிருக்கோம் தெரியுமா? இந்தா வாங்கிக்க ஒண்ணு பாக்கி இருக்கது'' என்று தாடையில் அடித்தான்.

# வஸந்த்! வஸந்த்!

''வஸந்த்! போதும்!'' என்றான் கணேஷ். ''இத பாருப்பா! உன்னை அனுப்பிச்ச ஆள் யாருன்னு சொல்லிடு... பொழுதோட விட்டுர்றோம். இல்லே முரண்டு பண்றேன்னு தீர்மானிச்சாலும் போலீஸ் கிட்ட ஒப்படைக்கறோம்.''

''அவுங்க பதினஞ்சு நிமிஷத்தில நீ சாப்பிட்ட பாயா குல்காவோட உண்மையையும் கக்க வெச்சுடுவாங்க! நகம் நல்லா வளத்திருக்கே இல்லே? ஊசி ஏத்தினாத் தாங்குமா?''

அவர்கள் ஒருவரை யொருவர் பார்த்துக் கொண்டார்கள்.

''எங்களை விட்டுடுங்க. நாங்க கூலிக்காரங்க!''

''சரி சரி! கூலி கொடுக்கறது யாருன்னு சொல்லு.''

''அவரு பேரு சரியாத் தெரியாதுங்க! நிசம்மா!''

''அவரு பேரு சரியாத் தெரிய உன்னை எந்த இடத்தில பிரியணும் சொல்லு. அங்க பிரியறோம்.... இல்லே உபரியா ஏதாவது எலும்பை உடைக்கலாமா?''

''வேண்டாம் வேண்டாம். அவரு பேரு அருண் பிரகாஷ்....''

''அட்ரஸ்ஸு?''

''பீட்டர்ஸ் ரோடில அவருக்கு ஆபிஸு. அருண் எண்டர்ப்ரைஸ்!''

''என்ன பிஸினஸ்?''

''ஏற்றுமதி இறக்குமதி.''

''என்ன ஏத்தறுங்க, என்ன இறக்கறுங்க?''

''சரியாத் தெரியாது. அப்புறம் ஓட்டல் வெச்சிருக்காரு. அப்புறம் அச்சாபிஸு... அப்



புறம் நிறைய பிஸினஸ் நடத்தறாருங்க! அவர் தான் எங்க ரெண்டு பேத்தையும் அனுப் பிச்சு அந்தாளுக்கு என்ன தெரியும்னு கேட் டுட்டு வரச் சொன்னாரு!''

''சில்லறை எவ்வளவு?''

''நூறு ருவாங்க!''

''இப்ப நீ பொய் சொல்றியா பார்த்துற லாமா?...'' கணேஷ் டெலிபோன் டைரக் டரியை எடுத்து ஆராய்ந்தான்.

''இப்ப ஆபீஸ் திறந்திருக்காதுங்க!''

''வீட்ல இருப்பாரா?''

''வீடு எங்கே தெரியாதுங்க! அய்யா! என்னை விட்டுடுங்க! நிசமாகவே நான் கூலிக் காரன்.... அவங்க பின்னாடிப் போவோம். அவருக்குப் பாதுகாப்புத் தருவோம். ரெண்டு வேளை சோறு போட்டு பேட்டா கொடுத்து அங்கங்கே அனுப்புவாங்க!''

''எவனாவது குடுமி ஆட்டான்னா தர்ம அடி அடிச்சுட்டு வந்திடுவீங்க! அப் படித்தானே?''

''அடி உதை கொஞ்சம் தாங்க.



பயப்படுத்துவோம். சினிமாவில இருந்தங்க. எம். ஜி. ஆர். ஆக்டிங்கை நிறுத்தினதுக்கு அப்புறம் வாய்ப்புக் கம்மி ஆய்டுச்சுங்க! சம்சாரம், ரெண்டு பொட்டைப் புள்ளேங்க. ஒண்ணு ஜெனரல் ஆஸ்பத்திரிலே நர்ஸா இருக்குதுங்க. மத்தது பத்தாங் கிளாஸ் படிக்குது....''

''பேர் என்ன?''

''ஏய் பேரும் வேண்டாம் ஒண்ணும் வேண்டாம்! வஸந்த், அருணா எண்டர் ப்ரைஸஸ் பீட்டர்ஸ் ரோடில இருக்குது. அதுவரைக்கும் பொய் சொல்லலே இவன்... அனுப்பி வைச்ச ஆள்தான் இவங்க.''

''விட்டுறலாமா பாஸ்!''

''கூடாது! வீட்டில நுழைஞ்சு கலாட்டா பண்ணதுக்கு போலீஸ் கம்ப்ளெயின்ட் கொடுத்துடு; அரெஸ்ட் பண்ணிட்டுப் போகட்டும்!''

''வேண்டாங்கய்யா. நான் போலீஸ் ஸ்டேஷன் வாசலே மிதிச்சதில்லே.''

''மிதிச்சுப் பாரு. எல்லாத்துக்கும் ஆரம்பம் வேண்டாமா?''

''அய்யா தயவு செய்து விட்டுருங்க....''

''ஏய், நீ சமீபத்தில் உக்கல் கிராமத்துக்குப் போனியா?''

''போனேங்க!''

''பல்லாவரத்தில உங்களஜமானருக்கு வீடு இருக்குதா?''

பல இடத்தில இருக்குதுங்க!''

''இரு வஸந்த்! உக்கல் கிராமத்துல என்ன செஞ்சே? கரெக்டா சொல்லு. விட்டுர்றேம்!''

''ஒண்ணும் செய்யலிங்க. வான் ஓட்டிக்கிட்டுப் போனேன். பொட்டில லோடு ஏத்தினாங்க. எடுத்து வந்து கொடவுன்ல விட்டேன்.''

''எத்தனை பொட்டி?''

''ஒரே ஒரு பொட்டி!''

''எவ்வளவு பெரிசு இருக்கும்?''

''இத இவ்வளவு!'' என்று அவன் கையில் சுமார் ஒன்னரை அடி அகலம் காட்டினான்.

''உயரம்?''

''அதும் அதேதாங்க. சீல் வெச்ச பொட்டி!''

''அதுக்குள்ள என்ன?''

''தெரியாதுங்க. சத்தியமாத் தெரியாது. நான் கேட்கிறதில்லே. கேக்கக் கூடாது... சொல்றதில்லே.''

''சரி, இப்ப வந்தியே. உனக்கு என்ன குறிப்பாச் சொல்லி அனுப்பிச்சாங்க?''

''கிணத்துல என்ன இருக்குன்னு திருப்பித் திருப்பிக் கேளுன்னாங்க. தங்கம்னு சொல்லுனு, நகைன்னு சொல்லுனு வெறும் பாசித் தண்ணின்னு சொல்லுனு... எல்லாத்தையும் கேட்டு வந்து சொல்லுன்னு சொன்னாங்க. அவ்வளவுதாங்க!''

''உக்கல் கிணத்துல என்ன செஞ்சிங்க?''

''நான் கிணத்துப் பக்கம் போனதில்லிங்க. அந்தக் கிணறு எங்க இருக்குன்னு தெரியாதுங்க!''

''கிணத்துல என்ன இருக்கு தெரியுமா?''

''அதுவும் தெரியாதுங்க. நான் கூலிக்காரன்!''

''டெலிபோனே எங்க வெட்டினே?''

''அவங்கதான் வெட்டச் சொன்னாங்க!''

''சரி, எங்க வெட்டினே?''

''உள்ள போற கேபிளைப் புடுங்கிப் போட்டேங்க!''

''வா! வந்து காட்டு.... வஸந்த்! அந்தக் கேபிளை டெம்பரியா மறுபடி கனெக்ஷன் கொடு.''

''அப்ப நான் போவலாங்களா?''

''இல்லே பிரதர் இன்னும் உன்னோட பேச வேண்டியது நிறைய இருக்கு!''

இந்நேரம் உட்கார்ந்திருந்ததில் அவர்கள் இருவருக்கும் புதிய தெம்பு பிறந்திருக்க வேண்டும். சற்றும் எதிர்பாராத சமயத்தில் திமுர் என்று புறப்பட்டு வாயிற் கதவை நோக்கி ஒருவன் ஓட, மற்றவன் அவனைத் தொடர.... வஸந்த் அவர்களைத் துரத்த முயல, கணேஷ் அவனிடம் ''வஸந்த்! லீவ் தெம்!'' என்றான்.

''எம் பாஸ்?''

---

## தவறிய வாய்ப்பு!

அப்பொழுது ஆசார்யாள் நாகப்பட்டினத்தில் முகாமிட்டிருந்தார். ஒரு நாள் கோயில் மதிள் சுவரில் சிறுவன் ஒருவன் 'சங்கராசாரியார் ஒழிக' என்று கரித்துண்டால் எழுதினான். ஆஸ்திகர் ஒருத்தர் அந்தச் சிறுவனைச் சிண்டுபிடியாகப் பிடித்தார். ஆத்திரம் தீர அடித்தார். நேரே ஆசார்யாளிடம் வந்து, நடந்ததை விவரித்தார்.

பெரியவாள் பொறுமையாகக் கேட்டு விட்டு, அந்த ஆஸ்திகரைக் கடிந்தார். ''தெரியாத சிறு பிள்ளை அவனை நீ அடிப்பானேன்?'' என்று கேட்டார். அதோடு நில்லாமல், ''நீ என்ன செய்திருக்கணும், தெரியுமா? அவனை என்னிடம் அழைத்து வந்திருக்கணும். அவன் எனக்கு முன்னால் அந்த வசை மொழியைச் சொல்லணும். அதைக் கேட்டுவிட்டு, இந்த மனம் சாந்தமாக இருக்கிறதா, சலனப் படுகிறதா என்று நான் பார்க்கணும்! ஒரு நல்ல சோதனை தவறிப் போச்சு'' என்று கூறினார். -மயிலன்



"போகட்டும்! இவங்க வெறும் கையாளுங்க! நாம பிடிக்க வேண்டியது எஜமானனை. என்ன பேர் சொன்னான்?"

"அருண் பிரகாஷ்."

"காலைல முதல் காரியமா அங்க போய்ப் பார்க்கலாம். மேல் விவரம் தெரியணும்னு அருணவுக்கு வரவும்னு அவங்கதான் நமக்கு இன்விடேஷன் அனுப்பிச்சிட்டிருக்காங்க! கொஞ்சம் கொஞ்சமாப் புரியுது வஸந்த். அந்த ஆள் நம்மை ஆழம் பார்க்கறான். அருணன்னு மொட்டையா பேர் கொடுத்துட்டா நமக்குப் பேர் தெரிஞ்சா வருவோம்னுஎதிர்பார்த்திருக்கான். வரலை. அப்புறம் அடியாளுங்களை அனுப்பிச்சிருக்கான். இதிலேருந்து என்ன தெரியுது...."

"ஒரு மண்ணும் தெரியலை. க. க. காட்டில விட்டாப்பல இருக்குது."

"வஸந்த்! முதல்ல இருந்து பாரு...ராஜராஜன் கிணறு எங்க இருக்குதுன்னு அந்த விவரம் அவங்களுக்குத் தேவையா இருந்திருக்கு. ப்ரொபஸருக்கு அந்த விவரம் தெரிஞ்சிருக்கு. அவருடைய ஆராய்ச்சிக் கட்டுரையைச் சரக்குன்னு பிடுங்கிட்டுப் போறாங்க. நீ பல்லாவரத்திலே போய்க் குட்டையைக் குழப்பிட்டு வந்தே... ஆனா அவங்க ஒரு வான்ல உக்கல் கிராமத்துக்குப் போறதுக்குத் தயார் பண்ணிக்கிட்டிருக்கிறதைப் பார்த்திருக்கே.... இப்ப ஸீன் ஆஃப் ஆக்ஷன் உக்கல். அங்க என்ன நடக்கிறது கோயில் வாசல்ல ஒரு கத்திக் குத்து. சதாசிவத்தோட விநோத வியாபாரம். குறுக்கே வந்த நம்மைக் கொல்ல முயற்சி. அந்தக் கோஷ்டி கொலைக்கு அஞ்சாதவங்க! தே ஆர் டெஸ்பரேட்! அவங்க என்ன செய்யறாங்க அல்லது செய்தாங்கங்கறது வெளிய தெரியாம இருக்கறதுக்கு எதுவும் செய்வாங்க போல! இல்லையா? இதுவரைக்கும் கிளியராத்தானே இருக்கு?"

"ம்ஹூம்!" என்று தலையாட்டினான் வஸந்த்.

"ஏதோ ஒரு பெரிய குற்றம் செய்யறாங்க!"

"அது தெரியுது. நான் சொல்றேன் பாஸ்! கிணத்துக்குள்ள இருக்கிற ட்ரெஷரை எப்படியோ பாதாளக்கரண்டி போட்டு எடுத்திருக்காங்க.... தங்கக் காசுகள்...நகை ஏதேதோ.... அதை அப்படியே மெட்ராஸுக்கு எடுத்து வந்து விக்க ஏற்பாடு செய்திருக்காங்க... தட்ஸ் இட்! ஐ காட் இட் ஏற்றுமதி.... இறக்குமதி! அருணா எண்டர்ப்ரைஸஸ்! வெளி நாட்டில பெரிய விலைக்குத் தங்கக் காசுகளை வித்திருக்காங்க!... என்ன சொல்றீங்க?"

கணேஷ், "ம்!.... இருக்கலாம். அது ஒரு சாத்தியம்!" என்றான்.

"வேற என்ன எழவு சாத்தியம் இருக்கு?"

"லூஸ் எண்ட்ஸ்!"

"என்ன? ஒண்ணொண்ணாச் சொல்லுங்க... முடிச்சுப் போடறேன்."

"பத்துக்கு நாப்பது வியாபாரம்!"

"ஸிம்பிள்! பத்துத் தங்கக் காசுக்கு நாப்பதாயிரம் ரூபா! அந்தச் சதாசிவம் நம்மை வியாபாரம் பேச—வந்தவங்கன்னு தப்பா நினைச்சுக்கிட்டார்...."

"இல்லை வஸந்த்! இந்த வியாபாரம் தலைகீழ் வியாபாரமா இருக்கு! பத்துக்கு முப்பது அல்லது பத்துக்கு இருபதுங்கறது பத்துக்கு நாப்பதை விட பெட்டரா, நல்லதா இருக்கே!"

"அப்படியா?"

"ஆமாம். அதுக்கப்புறம் பாரு. பஸ் ஸ்டாண்டிலே ஸாம்பிள் கொண்டு வந்தி



**முக தரிசனம்!**

ஸ்ரீ பெரியவர்கள் காஞ்சிபுரத்தில் வியாஸ சாந்தாலீஸ்வரர் ஆலயத்தில் தங்கி இருந்தார்கள். அப்போது எங்கள் கல்வி இலாகா இணை இயக்குநராக இருந்த ஒருவர் தமது குடும்பத்தாருடன் ஸ்ரீ பெரியவர்களைத் தரிசிக்க வந்திருந்தார். பெரியவாள் துவஜஸ்தம்பத்தினிடம் அமர்ந்து அவரது குடும்ப க்ஷேமங்களைப்பற்றி விசாரித்தார். கடைசியில் விடை பெறும்போது இயக்குநரின் தாயார் "சாமீ! தாங்கள் மைலாப்பூரில் இருந்தபோது தங்களை அருகில் வந்து தரிசனம் செய்ய முயன்றேன். மடத்தில் உள்ளவர்கள் என்னைப்பின்னால் தள்ளி விட்டரார்கள். எனக்கு இப்போது வயதாகி விட்டது. கண் சரியாகத் தெரியவில்லை. ஆகவே, சாமியை அருகில் இருந்து தரிசனம் செய்ய ஆவலாய் உள்ளது" என்று விக்ஞாபித்தார். உடன் பெரியவர்கள் என்னை அழைத்துக் கொட்டகையிலிருந்து பாட்டரி லைட்டைக் கொண்டு வரச்சொல்லி அதை ஏற்றித் தம் முகத்தில் படும்படி வைத்துக் கொண்டு "இதோ பார், நீ திருப்தி அடைந்து போதும் என்று சொல்கிறவரை நான் இங்கு அமர்ந்திருக்கிறேன். நீ உன் ஆசை தீரத் தரிசனம் செய்து கொள்" என்று கூறினார். அந்த அம்மையார் ஸ்ரீ பெரியவர்கள் முக விலாசத்தை ஆசை தீரத் தரிசித்து விடைபெற்றார்.

- வி. மீனாட்சி சுந்தரம்

## கிணற்றில் என்ன இருக்கிறது?



### பரிசு ரூ500/=

ராஜராஜன் கிணற்றில் என்ன இருக்கிறது என்ற ரகசியத்தைக் கண்டு பிடிப்பவர்களுக்கு ரூ. 500 பரிசு அறிவிக்கிறான் வஸந்த்! ஒரு தபால் கார்டில் ஓரிரு வரிகளில் ஒரே ஒரு அம்சத்தைக் குறிப்பிட்டு எழுதி அனுப்புங்கள். உங்கள் ஊகம் சுஜாதாவின் முடிவுடன் ஒத்துப் போக வேண்டும். ஒருவருக்குமேல் சரியான விடை எழுதினால் பரிசுத் தொகை பகிர்ந்து அளிக்கப்படும். ''கிணற்றுக்குள் என்ன இருக்கிறது?'' என்று தலைப்புத் தரவும். முடிவு தேதி ஜூன் 1.

யான்னு யாரோ ஒருத்தனைக் கேக்கறான்...''

''தஞ்சாவூர்க்காரனே.''

''அங்கேயும் அதே வியாபாரம்!''

''எனக்கு என்னவோ அது ஒரு கோயின்ஸிடன்ஸ்னு தோணுது.''

''எனக்கு அப்படித் தோணலே. ம்! ஜோடியத்தைப் பத்தி ஏதாவது தகவல் சேகரிச்சியா?''

''இருங்க. இப்பத்தானே ஆஸ்பத்திரிலே இருந்து கழண்டுண்டு வந்திருக்கேன். ஒரு நாள் டயம் கொடுங்க! ஜோடியத்தைப்பத்தி ஜோடியத்தோட பெண்டாட்டிக்குக் கூடத் தெரியாத தகவல்கள் சேகரிச்சுட்டு வரேன்!''

''முதல்ல டெலிபோனை எங்க வெட்டித் தொலைச்சிருக்கான்னு பாரு! காலேல கோர்ட் வேற இருக்கு. பெஞமி கேஸ் இழுத்து அடிக்கிறது. அப்புறம் தமிழ் நாடு டைரக்டர் ஆஃப் ஆர்க்கியாலஜி ஆபீஸ்ல ஒரு சின்ன வேலை இருக்குது.''

''அந்தப் பொண்ணு ஏதாவது கார்ப்பரேஷன் ஸ்கூல்ல படிக்கிற பொண்ணா இருக்கும்!''

''யாரு?''

''அந்த ஆளோட ரெண்டாவது பொண்ணு!''

''விவஸ்தையே கிடையாதா உனக்கு. இனியா கிட்டச் சொல்லப் போறேன்.''

''ஒரு கேஸை எடுத்துக்கிட்டா எல்லா விவரமும் தெரிஞ்சுக்க வேண்டாமா?''

● ● ●

**கா**லை எட்டு மணிக்கு வஸந்த் இனியாவைச் சந்திக்கச் சென்றான். வாசலிலேயே நாற்காலி போட்டுப் பேராசிரியர் வீற்றிருந்தார். எதிரே குள்ளமான மேசையில் டீ போஜும். அதில் ஒரு கப் எடுத்துக் கொண்டு சுந்தரமாக இனியா சிப்பிக் கொண்டிருந்தாள். அந்த இடமே அவளால் கொஞ்சம் பிரத்தியேகமாக வெளிச்சம் பெற்றிருந்ததாக வஸந்துக்குத் தோன்றியது.

''ஹலோ, வஸந்த்!''

''ஹலோ இன்னி... ஐ மீன் இனியா... ஹலோ ஸார்! காலேல என்ன பண்ணிக்கிட்டிருக்கீங்க. பேப்பர் படிக்கிறீங்களா? உடம்பு சுகமா?''

''சுகம்தாம்ப்பா. நீ எப்படி இருக்கே! சரியாப் போச்சா?''

''எல்லாம் ஸார் ஆசீர்வாதத்தாலே... வெய்யிலா இருக்கே. உள்ளே போய் உட்காரலாமே நீங்க?''

''பரவாயில்லே.'' என்றார், பைப்பை இழுத்துவிட்டு. தொடர்ந்து.

''வஸந்த் உன்கிட்ட ஸீரியஸா ஒண்ணு பேசணும்'' என்றார்.

''பேசுங்க ஸார்.... நான் எல்லாம் காது. ஐம் ஆல் இயர்ஸ்!''

இனியா, ''அப்பா நான் உள்ளே போறேன்!'' என்றாள்.

''இரு இனியா! பேச்சு உன்னைப் பத்தித் தான்!''

''இரு இனியா! நீ இப்ப உள்ள போனா வெளிச்சம் குறைஞ்சு போயிடும். அப்புறம் ஸார் பேப்பர் படிக்க முடியாது...''

''வஸந்த்! இனியாவுடைய கல்யாணத்துக்கு அவசரமா ஏற்பாடு செய்யணும்!''

வஸந்த் திடீரென்று மலர்ந்து ''அதுக்கென்ன ஸார்! மாப்பிள்ளைங்கிற ரீதியில அதுகூடச் செய்ய மாட்டேனா?'' என்றான்.

''மாப்பிள்ளையா? நீயா? யார் சொன்னது?.... அமெரிக்கா மாப்பிள்ளை! போட்டோவைப் பார்த்து ஒத்துக்கிட்டான்..... அடுத்த வாரம் வரான்....'' அவர் மேலே சொல்வது கேட்காமல் வஸந்தின் மனத்துக்குள் ஆயிரம் மின்னல்கள் ஓவர் டைம் செய்துகொண்டிருந்தன. (தொடரும்)

### காமாட்சி சுப்ரபாதம்

எனது தாத்தா லக்ஷ்மிகாந்த சர்மா பெரியவாளின் அனுமதி யில்லாமல் எதுவும் செய்ய மாட்டார். பதினைந்து வருடங்களுக்கு முன் பெரியவாளைப் பார்க்கப் போன பொழுது ''உள்ளே சென்று அங்கேயிருக்கும் அம்பாளைப் பத்து நிமிடம் பார்த்து வா'' என்று அவர் என் தாத்தாவிடம் சொன்னாராம். பார்த்து வந்த பின், ''நீ பார்த்த அன்னை காமாட்சிக்கு சுப்ரபாதம் பாடு'' என்று கூறினாராம். ''என்னால் அவ்வளவு பெரிய காரியத்தைச் செய்ய முடியுமா?'' என்று தாத்தா கேட்டதற்கு. ''உன்னால் தான் முடியும், முயற்சி செய்'' என்று பெரியவாள் ஆசி கூறினார். இதன் பலனாகவே என் தாத்தா லக்ஷ்மிகாந்த சர்மா காமாட்சி சுப்ரபாதம் எழுதினார். அதுவே திருமதி எம். எஸ். அவர்களால் பாடப்பட்டு அந்த இசைத்தட்டு உலகம் முழுவதும் பரவியது. இச் செய்தியை அறிந்து மகிழ என் தாத்தா இல்லை. அவர் காமாட்சியின் திருவடியை அடைந்து விட்டார்.

—ஆர். காமாக்ஷி

# நான்கு தவறுகள்: போட்டி முடிவு

## படங்களில் ஓவியர் ஜெயராஜ் தேர்ந்தெடுத்த நான்கு தவறுகள்

1. பதிலில் ஒரு புதுயுகம் — ஓவியர்: கல்பனா. தவறு: இடதுபுறம் பந்து பிடிக்க முயல்பவ னின் இடது கை அமைப்பு.

2. நந்தியாவட்டையும் பவழ மல்லிகையும் ஓவியர்: கங்கள் — தவறு: சிறுவனின் ஒரு கால் தண்ணீரில் மூழ்கியும் ஒருகால் தண்ணீருக்கு மேலும் இருப்பது.

3. சிவம் — தவம்—சுந்தரம்—ஓவியர்: வர்ணம் தவறு: பெண்ணின் பாதத்தில் நான்கு விரல்களே வரையப்பட்டுள்ளன.

4. ஒரு நடிகை ஜோசியம் பார்க்கிறாள் — ஓவியர்: மாருதி. தவறு: கிளி ஜோசியக் காரரின் உள்ளங்கால் விரல்கள் அமைப்பு.

மேற்படி நான்கு தவறுகளையும் கண்டு பிடித்து எழுதி ரூ 500 பரிசைப் பகிர்ந்து கொள்ளும் 96 வாசகர்களின் விவரம் பின் வருமாறு:

1. ஆர். செல்வகனி, அரியநாயகிபுரம்; 2. என். மோகன்தாஸ், புதுக்கோட்டை; 3. கே. கௌரி, காரைக்கோவில் பத்து; 4. மிஸஸ். ஓமனா, ஆலப் புழை; 5. புரு ஷோத்தமன், சேலம்; 6. சரோஜா கோபால் மைசூர்; 7. லலிதா கிருஷ்ணன், கொச்சி; 8. லலிதா ராமசாமி, ஆவடி; 9. எம். சிவ குமார், விருத்தாசலம்; 10. கோதைநாச்சி யார், சிவகாசி; 11. ஸ்ரீமதி மீனா, சென்னை-4; 12. வி. கே. துரைசாமி, கோவை—1; 13. வி. நடராஜன், திருப்பூர்; 14. பி. செல்வ ராணி, அகமதாபாத்-13; 15. கே. எஸ். சந்திரா, ஸ்ரீரங்கம்; 16. ஆர். அரிகோபி, குடியாத்தம்; 17. எஸ். பங்கஜம், திரு நின்றவூர்; 18 என். வீரய்யன், திருவாரூர்; 19. வி. நீலமேகம், கடலூர்-1; 20. சுப்பு லக்ஷ்மி சுவாமிநாதன், பம்பாய்-70; 21. எம். எஸ்.ரேணுகா, ஜாம்ஷெட்பூர்; 22. ஜி. ராஜி, திண்டிவனம்; 23. ராமேசுவர் பாபு, கரியபட்டி; 24.ஆர். ரேவதி, எரம் பட்டி; 25. பா. மணி, திருவண்ணாமலை; 26. எஸ். வி. பரமேசுவரன், சென்னை-4; 27. எஸ். கிருஷ்ணம்மாள், ராமேசுவரம்; 28. எம். நவாப்ஜான், பழனி; 29. என். ஜயந்தி, காஞ்சீபுரம்; 30. டி. கோவிந்தசாமி, கடலூர்,; 31. இரா. பாக்கியவதி, திருக் காட்டுப்பள்ளி; 32. எம். டேவிட், ரங்க பாரா வடக்கு; 33. ஓ. எம். பிரகாஷ்பாபு, பாண்டிச்சேரி; 34. ஜி. முத்துசுப்பிரமணி யன், சேலம்-5. ; 35 கே. எஸ். ஸ்ரீகாந்தம், ஸ்ரீரங்கம்; 36. ஆர். மங்கலட்சுமி, சென்னை-14; 37. ம. பாரதி, கோவை-38; 38. ரா. ஸ்ரீதர், சென்னை-40; 39. வி. சுகன்யா, திருச்சி-14; 40. எம். எஸ்.-வித்யா லக்ஷ்மி, செங்கோட்டை; 41. தீப சிவகுமார் உடுமலைப்பேட்டை; 42. எம். சம்பத், வேலா யுதம்பாளையம்; 43. டி. கதிர்வேலு, வட லூர்; 44. எஸ். கணேசமூர்த்தி, பாண்டிச் சேரி-1; 45. தமிழரசி சுப்பிரமணியம், மோக னூர்; 46. ஹரீஷ்பாபு, மதுரை-10; 47. ஆர். ஆண்டியப்பன், கரூர் 48. எஸ். வைத்தியநாதன், சென்னை-44; 49. மு. ராம்ராஜ், கிருஷ்ணகிரி; 50. எஸ். செல்வராஜு, மோகனூர்; 51. என். பெரு மாள், கரூர்; 52. எஸ். குமார், சென்னை-61; 53.ஹேமலதா,விழுப்புரம்; 54. ஜயலக்ஷ்மி, திருச்சி; 55. ஏ. தேவகுமார், நெடுங்குன்னம் 56. மாலதி வைத்தியநாதன், ஆரணி, 57. பி. நாச்சிமுத்து, சேலம்-3; 58. எஸ். ஆர். எஸ். மணி, அம்பாசமுத்திரம்; 59. எம். சுரேஷ்,சென்னை-102; 60.ஸ்ரீமதி சந்திரிகா சேகர், உடுமலைப்பேட்டை; 61. ஸ்ரீமதி சந்திரா, ஹௌரா -1 62. ரா. ராம மூர்த்தி, திருநெல்வேலி டவுன், 63. ஆர். சந்திரசேகர், இராசிபுரம்;64. எஸ். சுஜாதா திருநெல்வேலி; 65. எம். கே. சம்பந்தன், சென்னை-12; 66. சுபத்ரா, சென்னை-90; 67. என். விஜயலக்ஷ்மி, திருச்சி; 68. எஸ். பழனிசாமி, போடிநாயக்கனூர்; 69. ஏ. ஜோசப், சென்னை-81; 70. ஏ. அம்புஜம், வத்தலக்குண்டு;71. என். சிவராமன், பாலக் காடு-14; 72. எஸ். வீரராகவன், பாலக் காடு;73. ஜே. வசந்தி, அரக்கோணம்; 74. ஏ. சதீஷ், வேலூர்-3; 75. கே. எஸ். பன்னீரன், அறந்தாங்கி; 76. ஜி. ரமேஷ், காரைக்கால்; 77. ஏ. ரஞ்சினிதேவி அரக் கோணம் 78. ச. அண்ணாமலை, அரக் கோணம், 79. ஜே. மனோகர் பாபு,வேலூர்; 80. கே. சரவணன், மாயூரம்; 81. கே. ராதிகா, ஸ்ரீவில்லிப்புத்தூர்; 82. எஸ். முத்துலக்ஷ்மி, கோவில்பட்டி; 83. விஜயா பொன்னுத்துரை, தேவாஸ், மத்தியப்பிர தேசம்; 84. ச. பாபு, சேலம்-9; 85. எஸ் அருள், கோவை-18; 86. எஸ். லாவண்யா., செங்கல்பட்டு; 87. ரேவதி பிரசாத்,பம்பாய் 88. என். பாஸ்கரன், சேலம்-6; 89. எஸ். ராஜன், சென்னை-34; 90. ஜே. அன்புக்கரசி, சென்னை-19; 91. பி. துரைசாமி, சேலம்; 92. எஸ். என் லதா, சென்னை-30; 93. சரவணதேவி நடராஜன், கடலூர்-4; 94. மிஸ். ஹேமா, கோவை; 95. எம். தர்ம லிங்கம், மடுவன்கரை; 96. பெயர்,விலாசம் இல்லை.




ஒரே வீட்டில்தான் வசித்தனர். தாயும் மகனும் அன்னியர்களைப் போலப் பேச்சு வார்த்தையின்றி வாழ்ந்து கொண்டிருந்தனர். ஹர்ஷன் தன் வெளியூர்ப் பயணத்துக்குப் பின்னர் ஊரிலிருந்து திரும்பிய போது வாயில் வராந்தாவில் வேலைக்காரி வெற்றிலையைக் குதப்பிக் கொண்டு உட்கார்ந்திருப்பதைக் கண்டான். முன்னைவிட மெலிதாகி விட்டது போல் தெரிந்த ரோவர் அவனைக் கண்டு ஓடிவந்து மேலே விழுந்து கொஞ்சியது. என்னென்னவோ சொல்ல லொய் லொய் என்று புலம்பியது.

''அம்மாமீட்டிங்போயிருக்காங்க. அறைச் சாவிகளை நீங்க வந்தாக் கொடுக்கச் சொன்னாங்க.'' வேலைக்காரி தன் பொறுப்பைக் கழித்துவிட்டு வேகமாகக் கிளம்பி விட்டாள்.

இருட்டிக் கொண்டு வந்ததை உணர்ந்து முன்னறை விளக்கைப் போட்டுவிட்டு ரோவரைத் தோட்டத்தில் தள்ளிக் கதவைத் தாளிட்டுக் கொண்டு உள்ளே சென்றான்.

'ஹோ' வென்று பயங்கரமானதோர் அமைதியில் வீடு மூழ்கிக் கிடந்தது. வீடு பழைய நிலைமைக்கு மாறிவிட்டதையும் அவன் கவனிக்கத் தவறவில்லை. முன்னறையில் பத்திரிகைகள் தாறுமாறாக மடிக்கப்பட்டுப் போட்ட நிலையில் கிடந்தன.

சமையலறையில் வேலைக்காரி அவசரமாகக் கழுவி வைத்துவிட்டுப் போன பாத்திரங்கள் மேடை மீது குவியலாகக் கிடந்தன. மாடியில் அவனது அறையில் அவன் கிளம்பிய அன்று உபயோகித்த படுக்கை விரிப்பு மாற்றப்படவில்லை. களைந்து போட்ட பைஜாமா சட்டை தோய்க்கப்படாது நாற்காலி மீது அப்படியே கிடந்தது. தாடை



# கழுத்தில் விழுந்த மாலை

லக்ஷ்மி

இறுகக் கோபத்துடன் தன் அறையை வெறித்துப் பார்த்துவிட்டுப் பயணக் களைப்பு தீரக்குளித்து வேறு உடுத்திக் கொண்டான். படுக்கை மீது கிடந்த அழுக்கு விரிப்பை இழுத்துச் சுருட்டி அறையின் மூலையில் விட்டெறிந்தான். அலமாரியைத் திறந்து சுத்தமானதொரு விரிப்பை எடுத்துப் படுக்கையின் மீது போட்டான். கட்டிலைச் சுற்றிச் சுற்றி விரிப்பை இழுத்து மடித்து மெத்தை மீது ஒழுங்கு செய்வதற்குள் அவனுக்குத் தோள் பட்டைகள் வலித்தன. களைப்பும் பசியும் எரிச்சலை ஊட்டவே மாடிப் படிகளை வேகமாகக் கடந்து சாப்பாட்டறைக்கு வந்தான்.

''ஹாட்கண்டெய்னரில்சாப்பாடு இருக்கு. எடுத்துப் போட்டுக் கொண்டு சாப்பிடலாம். எனக்காகக் காத்திருக்கத் தேவையில்லை....'' அம்மா மொட்டையாக எழுதியிருந்த கடிதத் துண்டுடன் ஒரு ஸ்டீல் பாத்திரத்தில் சாப்பாடு தயாராக வைக்கப் பட்டிருந்தது.

''பத்து மாதம் சுமந்து பெற்று வளர்த்த என்னைவிட நேற்று வந்த எவளோ ஒருத்தி அம்மாவுக்கு உசத்தியாகி விட்டாள். ரோவருக்குச் சாப்பாடு போடுவது போல் அல்லவா இந்த அம்மா....'' பற்களைக் கடித்துக் கொண்டான். பசி வயிற்றைச் சுருட்டவே தட்டை எடுத்து வைத்துக் கொண்டு பிரிஜ்ஜிலிருந்து குளிர் நீர் கொண்ட பாட்டிலைத் தூக்கி வைத்துக் கொண்டு கொட்டு கொட்டென்று தன்னந் தனியே மௌனமாகச் சாப்பிடத் தொடங்கினான். அவனுக்கு ஆத்திரமாக வந்தது. இதுநாள் வரை தாய்க்கும் மகனுக்கும் இடையே எத்தனையோ சிறு மனஸ்தாபங்கள் ஏற்பட்டிருக்கின்றன. ஆனால் அம்மா கஸ்தூரி சமைத்த உணவைத் தன் கையாலே அவனுக்குப் பரிமாறத் தவறியதில்லை. எத்தனை நேரம் கழித்து வீட்டுக்கு வந்தாலும் தூக்கத்தை உதறிவிட்டு அவனுக்குச் சாப்பாடு எடுத்துப் போட வருவது வழக்கம். அத்தனை கருத்துடன் கவனித்த தாய் இப்போது ஒரேயடியாக இப்படி விலகிக் கொண்டு விட்டாளே?....

மனத்தை வேதனை நெருடியது. சாப்பிட்டு விட்டுத் தட்டை அப்படியே மேஜை மேல் போட்டுவிட்டுக் கையைக் கழுவிக் கொண்டு மாடி அறைக்குப் போய் விட்டான்.

தோட்டத்துக்குள் கார் வரும் சத்தம் கேட்டது. ஷெட் திறக்கப்பட்டுக் கதவு மூடும் ஓசையும் கேட்டது. ரோவர் உற்சாகத்துடன் குரைத்தது காதில் விழுந்தது.

ஆனாலும் அவன் எழுந்து கீழே வந்து தாயைப் பார்த்துப் பேச விரும்பவில்லை.

கஸ்தூரிக்கு அவன் வந்து விட்டது புரிந்தது. ஆனால் அவளும் கண்டுகொள்ளவில்லை.

அம்மா பேசட்டும் என்று பிடிவாதமாக மௌனமாக அவன் இருந்தான்.

அவளும் விட்டுக் கொடுப்பதாக இல்லை. விளைவு, இருவரும் விரோதிகள் போல் ஒரே வீட்டில் பேச்சு வார்த்தை இன்றி வசித்துக் கொண்டிருந்தனர்.

மாதங்கியை வீட்டை விட்டு அனுப்ப அவன் நிர்ப்பந்தித்ததின் காரணம் என்ன என்று தாயார் அவனிடம் கேட்க முயலவேயில்லை.

'பெரியப்பா வீட்டுக்குத்தானே அனுப்பினீங்க?' — அவனும் கேட்க முன்வரவில்லை.

ஆரம்பத்தில் தான் சமைத்ததை ஹீட் கன்டெய்னரில் போட்டு மேஜை மீது அவனுக்காக வைத்துவிட்டு விரைவாகத் தன் சாப்பாட்டை முடித்துக் கொண்டு, ரோவருக்கு உணவு தந்துவிட்டுத் தன் அறைக்குள் சென்று முடங்கிக் கொண்டாள் கஸ்தூரி.

பின்னர் அந்த வழக்கத்திலும் சில மாறுதல்களைச் செய்யத் தொடங்கினாள்.

''இன்னிக்குச் சிநேகிதிவீட்டிலேசாப்பிடப் போறேன். சமைக்கப் போவதில்லை.''

''இட்டிலிக்கு அரைத்த மாவு பிரிட்ஜிலே இருக்கு. காஸ் அடுப்பு இருக்கு. வேண்டுமானால் ஒரு சுடு வச்சுச் சாப்பிட்டுக்கலாம்.''

இந்த மாதிரித் துண்டுக் கடிதங்களைக் கண்டு ஹர்ஷன் கோபத்தில் கொதித்துப் போனான்.

தானும் தினமும் வெளியிலேயே சாப்பிட்டு விட்டு வீடு திரும்பத் தொடங்கினான். அதுவும் சில நாட்களில் அலுத்துப் போனது.

காரக் குழம்பு, மெத்தென்ற தோசை... இவைகளை நினைத்து நாக்கு தவித்தது.

இரவு உணவுக்குப் பின் தூக்க மயக்கத்திலே சோர்ந்து போய்த் தன் அறைக்குள் வரும்போது படுக்கையைத் தட்டிக்கொட்டிச் சுத்தமான விரிப்புப் போட்டு, கண்ணாடி கிளாஸில் தண்ணீரும் டம்ளரும், பிளாஸ்கில் சூடான பாலும் யாராவது தயாராக வைத்திருக்க மாட்டார்களா என்றுதான் ஏக்கமாக இருந்தது.

ஒருசில தினங்களுக்குப் பின் அம்மா மேஜை மேல் வைத்துப் போயிருந்த துண்டுக் கடிதத்தை எடுத்துப் படித்து விட்டு அவன் ஆத்திரத்தில் ஆடிப் போய் விட்டான்.



ஒரு கேள்வி — ஒரு பதில்!

# "மக்கள் மன்றமே பெரிது!"

**— அன்பழகன்**

கேள்வி: மக்கள் பிரச்னைகளை அரசுக்குத் தெரிவிக்க சட்டசபைதான் சரியான இடம்; அப்படியிருக்க, பிரச்னைகளின் பின்னணி எதுவாக இருப்பினும் சட்ட சபைக்குச் செல்லாமல் பகிஷ்கரிப்பது தேர்ந்தெடுத்த மக்களுக்குத் துரோகம் செய்வது போல் ஆகாதா?

அன்பழகன் பதில்: நாங்கள் ஏன் இந்த முடிவுக்கு வந்தோம் என்பதை நடைபெற்ற சம்பவங்களைப் பின்னணியாக வைத்துக் கொண்டுதான் பார்க்க வேண்டும். ஆளும் கட்சி உறுப்பினர்கள் என்றால் அவர்களுக்கு ஒரு நியாயமும், எதிர்க் கட்சி உறுப்பினர்களுக்கு ஒரு நியாயமும் இந்த ஆட்சியில் இருக்கிறது. 1979ல் சட்டமன்றத்தில் எங்கள் கட்சி உறுப்பினர்கள் செருப்பைக் காட்டினார்கள் என்று குற்றம் கூறினார்கள். அப்போது அவையிலிருந்த நான் அதற்காக மன்னிப்புக் கேட்டுக் கொண்டேன். ஆனாலும் அந்தப் பிரச்னையை விடாமல், மறுநாள் உரிமைக் கமிட்டிக்கு அனுப்பி எங்கள் கட்சி உறுப்பினர்கள் மூவரை அந்தக் கூட்டத்தொடர் முழுவதும் வராமல் தடை செய்தார்கள். ஆனால் இப்பொழுதோ, எல்லோர் எதிரிலேயும் ஆளும் கட்சி உறுப்பினர் ஒருவர் செருப்பை எங்களை நோக்கி வீசியிருக்கிறார். இந்த நிகழ்ச்சிக்கு வருத்தம் கூடத் தெரிவிக்காமல் பிரச்னையை அலுவல் ஆய்வுக் குழுவுக்கு விட்டிருக்கிறார்கள். நிலைமை இப்படியிருக்க மீண்டும் சட்டமன்றம் சென்று செருப்படி படுவதை நாங்கள் விரும்பவில்லை. சட்ட மன்றத்தை விட மக்கள் மன்றத்தைப் பெரிதாக மதிக்கிறோம். ஆளும் கட்சியின் இந்த அநியாயப் போக்கை மேடைக்கு மேடை நாங்கள் பேசத்தான் போகிறோம். எங்களை இந்த நிலைக்கு ஆளாக்கிய பெருமை ஆளும் கட்சியையே சாரும். நாங்கள் சட்ட மன்றத்தைப் பகிஷ்கரிப்பதை, பொது மக்கள் துரோகமாக நினைக்க மாட்டார்கள் என்ற நம்பிக்கை எங்களுக்குப் பரிபூரணமாக இருக்கிறது.

பேட்டி : ப்ரியன்

'நான் இப்போது உடல் நலனைக் கருதிப் பத்தியமாகச்சாப்பிடத்தொடங்கியிருக்கேன்; எனக்குக் கஞ்சி மட்டும் போதும்... சம்பிரதாயமான சாப்பாட்டை விரும்புகிறவங்க தானே சமைத்துக் கொள்வது நலம்.''

''இந்தம்மா ரொம்பத்தான் விளையாடறாங்க... இருக்கட்டும் நானும் யார் என்று காட்டுகிறேன். ஒரு பெண்ணுக்குத்தான் குடும்பத்தை நிர்வகித்து வீட்டைக் கவனிக்கத் தெரியுமா? ஒரு ஆண் பிள்ளைக்குச் சமையலறையில் புகுந்து ஒரு கப் காப்பி கூடக் கலந்து சாப்பிடத் தெரியாதா? நளனும் பீமனும் ஆண்பிள்ளைகள்தான்.... அம்மா மறக்க வேண்டாம்.'' என்று தனக்குள்ளே வெகுண்டபடி சமையலறையில் புகுந்து சுயம்பாகத்தில் ஈடுபட்டான்.

எத்தனையோ முறை கைகளைச் சுட்டுக் கொண்டு விட்டான். பால் பாத்திரத்தைக் கீழே தவற விட்டான். டிகாக்ஷனைத் தரையில் ஓடவிட்டான். அவசரமாகக் குக்கரைத் திறந்துவிட்டு அது ஆக்ரோஷமாக உணவைக் கூரை முகட்டில் வாரித் தெளிப்பதைக்கண்டு அரண்டு வெளியே ஓடினான்.

இத்தனையும் வேடிக்கை பார்த்துக்கொண்டு மௌனமாக விலகிப் போய்க் கொண்டிருந்த தாய் மீது அவனுக்கு எரிச்சலாகத்தான் இருந்தது.

சில மாதங்களில் வீட்டைப் போலவே தோட்டமும் சீர்குலைந்து போய்விட்டிருந்தது. முழங்கால் உயரத்துக்குப் புல் வளர்ந்து புதர்கள் மண்டித் தோட்டம் காடாகிப் போனதைக் கண்டு கவலைப்பட்டான். ஓர் ஓய்வு நாளன்று தோட்டத்தைச் சீராக்கத் தோட்டவேலையாள்ஒருத்தனை அமர்த்தினான்.

மாதங்கி எப்படித்தான் அந்தத் தோட்டக்காரனிடம் வேலை வாங்கிச் சமாளித்தாளோ, தெரியாது.

காலையில் மண் வெட்டியைக் கையில் எடுக்கு முன் ''ஐயா பசிக்குது... காப்பி பலகாரம் ஏதாச்சும் 'இருந்தா கொடுங்க'' என்று வற்புறுத்தினான்.

ஹர்ஷனுக்கே சாப்பாடு திண்டாட்டமாக இருந்த நிலையில் பகல் உணவு வேறு கொடுக்கச் சொல்லித் தோட்டக்காரன் அடம் பிடித்தான்.

அரை குறையாக வேலையைச் செய்து விட்டு இருபது ரூபாய்களை வாங்கிக்கொண்டு முணு முணுத்தபடி முண்டாசை இறுக்கிக் கட்டிக் கொண்டு வெளியேறிய தோட்டக்காரனுடன் அவன் விவாதம் செய்ய இயலவில்லை.

தொடர்ந்து தோட்டப் பராமரிப்பை ஒரேயடியாகக் கைவிட்டு விட்டான்.

அன்று காலை டிகர் காப்பியைத் தானே கலந்து குடித்துவிட்டுத்தான் அலுவலகத்துக்குக் கிளம்பி யிருந்தான். தேநீர் வேளையின்போது அருகிலிருக்கும் ஹோட்டலுக்குச் சென்று ஏதாவது சாப்பிடா விட்டால் வேலை ஓடாது போன்றதொரு பசியில் அவன் எரிச்சலோடு ஃபைல்களைப் புரட்டிக்கொண்டிருந்தான்.



**வெள்ளிக்காசு!**

எனக்கு எட்டு வயது நடக்கும்போது புதுக்கோட்டைக்கு ஜகத்குரு விஜயம் செய்திருந்தார். என் ஆசிரியை ஒரு கோடி ஸ்ரீராமஜெயம் எழுதி மடத்திலிருந்து தங்கக் காசு பெற்றிருந்தார். நாமும் ஸ்ரீராமஜெயம் எழுதி ஒரு வெள்ளிக் காசாவது பெற்றுப் பூஜையில் வைக்க வேண்டும் என்ற அவா எனக்கு ஏற்பட்டிருந்தது. ஒரு சிறிய நோட்டில் நம்பர் வரிசையாகப் போட்டு லட்சம் ஸ்ரீராமஜெயம் எழுதி வைத்திருந்தேன். இந்த நோட்டை எடுத்துக் கொண்டு சென்றேன். என்னோடு வந்தவர்களெல்லாம் பெரிய நோட்டுக்களில் கொட்டை எழுத்துக்களில் எழுதிக் கொண்டு வந்தார்கள். அங்கு இருந்த மானேஜர் எல்லார் நோட்டையும் வாங்கிக்கொண்டு வெள்ளிக் காசைக் கொடுத்து அனுப்பி விட்டார். என் நோட்டு மிகவும் சிறியதாக இருந்ததால் ''நீ லட்சம் எழுதியிருக்க மாட்டாய். உனக்கு வெள்ளிக் காசு இல்லை'' என்று கூறிவிட்டார். சிறியவளான எனக்கு மறுத்துப் பேசத் தெரியவில்லை. பெரியவர்கள் யாரும் உடன் வரவில்லை. மனம் வேதனையுறக் கண்ணீர் ததும்ப, 'காசுதான் கிடைக்கவில்லை, தீர்த்தமாவது பெற்றுச் செல்வோம்' என்று அந்த வரிசையில் போய் நின்றேன். என் முறை வந்ததும், ஸ்வாமிகள் கனிவுடன் ''உன் பெயர் என்னம்மா? ஏன் அழுகிறாய்?'' என்று கேட்டார். உடனே எனக்கு இன்னும் பெரிதாக அழுகை வந்தது. விசும்பலினூடே என்பெயரையும் நடந்ததையும் கூறி, ஸ்வாமிகளிடம் நோட்டைக் காண்பித்தேன். உடனே ஸ்வாமிகள் மானேஜரைக் கூப்பிட்டு, 'சிறு பெண் பக்தியோடும் சிரத்தையோடும் எழுதிக் கொண்டு வந்திருக்கிறாள். நாம் வெள்ளிக் காசு கொடுத்து ஊக்குவிக்க வேண்டும்' என்றார். பிறகு தம் திருக்கரத்தாலேயே காசையும் அம்பாள் பிரசாதத்தையும் எனக்குத் தந்து ஆசிர்வதித்தார். 'இனமும் ஸ்ரீராமஜெயம் எழுதுவதை நிறுத்தாதே' என்று உபதேசித்தார். அந்த மானேஜரை நான் வாழ்த்தாத நாளே கிடையாது. எல்லோரும் மானேஜரிடம் காசு வாங்கிச் சென்றபோது எனக்கு மட்டும் ஸ்வாமிகள் கரத்தாலேயே காசு பெறும் பாக்கியம் கிடைத்தது அவரால்தானே!

— என். லக்ஷ்மி

அலுவலகப் பையன், கொண்டு வந்த ஒரு சீட்டை மேஜைமேல் வைத்துவிட்டு, ''உங்களைப் பார்க்க ஒரு ஐயா வெகு நேரமாகக் காத்திட்டு இருக்கார்'' என்றான்.

''ரமேஷ்—நீலகண்டன்''-யார்இவன் என்று எண்ணியபடி சீட்டைப் பார்த்து முகத்தைச் சுளித்து விட்டு 'வரச் சொல்' என்று உறுமினான்.

கண்ணாடிக் கதவைத் தள்ளிக் கொண்டு ஏ. சி. அறைக்குள் புகுந்த அந்த வாலிபனை ஏற இறங்கப் பார்த்தான்.

எங்கேயோ பார்த்த நினைவு — திடீரென்று நெஞ்சில் நெருப்பாகக் கனன்றது.

அவன் மணக்கவிருந்த ஜயந்தியை அழைத்துக் கொண்டு கல்யாணத்துக்கு முதல் நாள் திருத்தணியிலிருந்து மறைந்து போன திருடன்.... இல்லை இல்லை. தயானந்தின் மதிப்புக்குரிய மருமகன்.

''உங்களுக்கு என்னை யார்னு....'' ரமேஷ் ஆரம்பிக்கு முன் எரிச்சலோடு கையை அமர்த்தினான். ''தெரியும். உட்காருங்கள். வந்த விஷயம்?'' என்று அழுத்தலாகக் கேட்டான்.

''என் தந்தையின் அறுபதாவது பிறந்த நாளை விமரிசையாகக் கொண்டாடத் திட்டமிட்டிருக்கிறோம். வீடு சிறியதாக இருப்பதால் விழாவை எங்கள் வீட்டருகிலுள்ள கல்யாண மண்டபத்திலே வச்சிருக்கோம். நீங்க கட்டாயம் வந்திருந்து எங்களைக் கௌரவிக்கவேணும்னு நேரிடையாக அழைக்கத்தான் வந்தேன். — பத்திரிகையை அலுவலகத்திலே கொண்டு வந்து கொடுக்கிறதைப் பத்தி மன்னிக்கணும். நான் ஒவரிடம் வேலை செய்வதால் மாலை வீட்டுக்கு வந்து அம்மாவிடமோ தங்களிடமோ நேரில் தர இயலவில்லை.'' சொல்லிக் கொண்டே கையோடு கொண்டு வந்திருந்த தோல் பையைத் திறந்து அழைப்பிதழ் ஒன்றை எடுத்தான்.

''அம்மாவுக்கும் உங்களுக்கும் உங்கள் மனைவிக்கும் சேர்த்து ஒரே பத்திரிகையைக் கொடுப்பது பற்றி உங்களுக்கு ஆட்சேபனை இல்லையே...'' என்று கேட்டுக்கொண்டு பேனாவைக் கையில் எடுத்தான் ரமேஷ் நீலகண்டன்.

'மனைவி' என்று அவன் குறிப்பிட்டவளை எண்ணியபோது சாட்டையால் அடித்தது போன்ற வேதனையில் முகத்தைச் சுளித்துக் கொண்டான் ஹர்ஷன்.

மாதங்கி இப்போது அவர்கள் வீட்டில் இல்லை என்ற சங்கதி தயானந்த் குடும்பத்தாருக்குத் தெரியாது போலல்லவா இந்த ரமேஷ் பேசுகிறான்? வம்பு எங்கே என்று அலையும் குடும்பமாச்சே அவனது மாமனார் வீடு. மனத்துக்குள்ளேயே வெகுண்டபடி மௌனமாகத் தலையை அசைத்தான்.

திரு ஹர்ஷன் அவர்களுக்கும் அவரது குடும்பத்தாருக்கும் என்று எழுதி முகவரியைக் குறித்துப் பத்திரிகையை அவனிடம் நீட்டினான் ரமேஷ்.

பெற்றுக் கொண்ட ஹர்ஷன் ஒரு கணம் திடுக்கிட்டுப் போனான்.

அந்தக் கையெழுத்து... மிகவும் பழக்கமானது போல் அடி மனத்தை உறுத்துவதை உணர்ந்தான்.

காப்பி வரவழைத்து வந்தவனை உபசரித்து அனுப்பிய பின்னும் பலமுறை அழைப்பிதழ் உறையின்மீதிருந்த கையெழுத்தை ஊன்றிப் பார்த்து மண்டையைக் குழப்பிக் கொண்டான்.

அன்று மாலை அவன் வீடு திரும்பியபோது கஸ்தூரி வீட்டில் இருக்கவில்லை. மாதர் சங்கக் கூட்டத்தில் பேசப் போயிருந்தாள். பிரிஜ்ஜிலிருந்த தோசை மாவை எடுத்துக் கொண்டு சமையலறைக்குள் நுழைந்தான் ஹர்ஷன். தோசைக் கல் சூடானதும் மாவை வார்த்து எண்ணெயை ஓரத்திலே ஊற்றிக் கொண்டிருந்தபோது திடீரென்று அவன் நினைவில் பொறி தட்டியது.

அப்படியே மாடிக்கு ஓடி அலமாரியில் புத்தகங்களின் இடுக்கிலே ஒரு பக்கமாகப் பத்திரமாக வைத்திருந்த அந்த மொட்டைக் கடிதத்தை உறையோடு எடுத்துக்கொண்டு கீழே ஓடி வந்தான்.

விளக்கு வெளிச்சத்தில் அழைப்பிதழ் முகவரியில் காணப்பட்ட கையெழுத்தையும் அந்த மொட்டைக் கடிதத்தின் உறை மீது காணப்பட்ட கையெழுத்தையும் ஊன்றிக் கவனித்தான்.

மார்பு படபடவென்று துடிக்கக் கோபத்தில் மனம் நெருப்பாகக் காய்ந்தது. அடுப்பிலேஅதே சமயம் கல் மீது அவன் வார்த்த தோசையின் தீய்ந்த மணம் வீடு முழுவதும் பரவியது.

(தொடரும்)

### ''பிள்ளையிடம் போ!''

தாத்தா லக்ஷ்மிகாந்த சர்மா உபந்நியாசம் செய்து கொண்டிருந்தவர். இறப்பதற்கு இரண்டு மாதம் முன் ஆச்சார்யாளிடம் சந்நியாசம் கொடுக்கும்படி வேண்டிக்கொண்டார். அதற்குப் பெரியவர் ''இப்பொழுது சந்நியாசம் தேவையில்லை. எங்கும் சுற்றாமல் உன் பிள்ளையிடம் போ'' என்று சொன்னார். அதன்படி என்னுடைய தாத்தா பெண்கள் இருக்குமிடமான சென்னையிலோ திருச்சியிலோ தங்காமல், தம் பிள்ளையிடம் பொள்ளாச்சிக்குப் போய்ச் சேர்ந்தார். போய்ப் பத்தே நாட்களில் இறைவனடி சேர்ந்தார். இறக்கும் காலத்தை முன்பே அறிந்து பிள்ளையிடம் சேர்ப்பித்த பெரியவாளின் அருளை என்னென்பது!

—ஆர். காமாக்ஷி



# பூக்காத செடிகளும் காய்க்காத பூக்களும்

## கருணையானந்தன்

அலுவலகப் பணி காரணமாக மதுரைப் பயணம் உறுதியானதும் 'நிர்மலாவை மீண்டும் அங்கே சந்திக்கும் வாய்ப்புக் கிடைக்குமா?' என்ற தாபம் ஏன் எதற்கு என்ற காரண காரியமில்லாமல் கணேசனின் நெஞ்சில் புகுந்து கொண்டு விட்டது.

தமிழ் நாட்டை விட்டு அவன் விலகிநின்ற இந்தப் பன்னிரண்டு ஆண்டு இடைவெளியில் அங்கே என்னென்ன மாறுதல்களோ...!

நிர்மலா இன்னமும் மதுரைக் கிளையிலேயே பணி புரிந்து கொண்டிருக்கிறாளா அல்லது வசதியான குடும்பத்தில் வாழ்க்கைப்பட்டு வேலையை ராஜிநாமாச் செய்து விட்டுப் போய்விட்டாளா — அவனுக்குத் தெரியாது!

தாதர் எக்ஸ்பிரஸ் சென்னையை நோக்கி விரைந்து கொண்டிருந்தது.

நினைவில்தங்கிவிட்ட நிர்மலாவின் மோகன உருவம் கணேசனின் மனத் திரையில் நிழலாடியது.

சங்கிலித் தொடராக... அவளது சிவந்த அதரங்களும், அவற்றின் கழிப்பில் மின்னலடிக்கும் புன்னகையும் அவனுடைய நினைவுக்கு வந்தன. ''மண்டியிடு... மண்டியிடு'' என்று ஆக்ஞாபிக்கும் அந்தக் கரிய பெரிய விழிகளை மறக்கத்தான் முடியுமா?

நிர்மலாவுக்குத் தான் பேரழகியாக இருக்கிறோம் என்ற பிரக்ஞை நிறைய இருந்தது. அவளுடைய ஒவ்வொரு பேச்சிலும் செயலிலும் ஓர் அழகிக்குரிய நியாயமான கர்வம் கலந்திருக்கும்.

நிர்மலா அழகியாக இல்லாமல் சராசரிப் பெண்ணாக இருந்திருந்தால் ஒருவேளை என் அன்பைப் புரிந்து ஏற்றுக் கொண்டிருப்பாளோ? — கணேசனிடமிருந்து ஒரு பெருமூச்சு வெளிப்பட்டது.

மதுரைக் கிளையில் அவன் பணியாற்றிய அந்தக் கடைசி நாளில் நடந்த சம்பவத்தை நினைவு கூர்ந்தது அவன் மனம்.

அன்று—

உடனடியாகச் செய்து முடிக்க வேண்டிய சில அவசர வேலைகளின் நிமித்தம் அலுவலக நேரத்துக்குப் பின்னும் ஓரிருவர் பின் தங்க நேரிட்டபோது அவன் பிரிவில் அவனும் நிர்மலாவும் மட்டும்தான் இருந்தனர்.

அவளிடம் தனிமையில் பேச ஒரு சந்தர்ப்பத்துக்காகக் காத்திருந்த கணேசன் பரபரத்தான்.

அவன் அவளெதிரே போய் நின்றபோது, மும்முரமாக எழுதிக் கொண்டிருந்த நிர்மலா குனிந்த தலை நிமிராமலேயே ''ஸ்டேட்மெண்ட் முடிந்த மாதிரிதான் ஸார்....'' என்றாள். — அதை விசாரிக்கத்தான் அவன் வந்திருப்பான் என்ற அநுமானத்தில்.

அவளுடைய வெண் சங்குக் கழுத்தின் அடிவாரத்தில் பொடிந்திருந்த வியர்வை முத்துக்களைப் பெருமூச்சோடு பார்த்துக் கொண்டு நின்றான் கணேசன்.

சொல்ல வந்ததைச் சொல்ல முடியாமல் ஒரு திணறல்...

பதில் ஏதும் வராமற் போகவே தலை நிமிர்ந்த நிர்மலா அவனிடம் தென்பட்ட வித்தியாசத்தால் உந்தப்பட்டு எழுதுவதை நிறுத்திவிட்டுச் சட்டென்று நிமிர்ந்து உட்கார்ந்தாள்.

''என்ன ஸார்?''

''ஐ லவ் யூ வெரி டீப்லி... ஐ வாண்ட் டு மேரி யூ... நிர்மலா!'' என்று அவன் சொல்லி முடித்தான்.

அந்த இரண்டு நிமிடமும் எவ்வித ரியாக்ஷனும் இல்லாமல் மௌனமாகக் கேட்டுக் கொண்டிருந்த நிர்மலா மேலும் சில விநாடிகளை மௌனத்தின் பிடியில் நழுவ விட்டபோது அந்த அசாதாரண சூழல் அவனுள் உறுத்தத் தொடங்கியது.

அவள் சினந்து சீறியிருந்தால் கூடப் பாந்தமாக இருக்கும் என்று பட்டது.

தவறு செய்து விட்டு வந்து கையைப் பிசைந்து கொண்டு நிற்கும் குழந்தையை மன்னிக்கும் பெருந்தன்மை மிளிரும் பார்வையில் அவனை அவள் ஏறிட்டுப் பார்த்தாள்.

அந்த விநாடியில்—

அவனுடைய மேலதிகாரி என்ற கௌரவம் இழந்து அவளுக்கு முன் பரிதாபமாகக் கையேந்தி நிற்கும் பிச்சைக்காரனாக...

—சே...

அவன் தனக்குள் நொறுங்கிப் போனான்.

நிர்மலா நிதானமாகப் பேசலானாள்:

''ஸார்... நான் தெனிலவில் கணவனோடு கைகோர்த்துக் கொண்டு ஊட்டி கொடைக்கானலில் ஆடிப் பாடி மகிழ்வதாகக் கற்பனை செய்ததில்லை. ஆனால் ரோஜா மொக்குப் போல் அழகான என் குழந்தையை மானசீகமாக மடியில் போட்டுத் தாலாட்டியிருக்கிறேன் பல முறை... அழகான குழந்தைகள் என்றால் அத்தனை ஆசை எனக்கு..

நான் உங்களை மணந்து கொண்டால் என் கனவுகள் சிதைந்து போகும்.''

அழகான குழந்தைக்கு அவன் எப்படி உத்தரவாதம் தர முடியும்?

கணேசன் தன்னம்பிக்கையும் துடிப்பும் மிக்க இளைஞன்தான். ஆனால் பர்சனலிட்டி விஷயத்தில் பரம ஏழை. அந்தப் பலவீனத்தைத்தான் அவள் சுட்டிக் காட்டிப்பேசினாள்.

'தங்க மெடல் வாங்கிய என் கல்வியறிவு—வேலையில் சேர்ந்த மூன்றே ஆண்டுகளில் பதவி உயர்வை சுட்டித் தந்த என் செயல் திறன் இவற்றை யெல்லாம் மறந்துவிட்டு இவளை நான் எத்தனை ஆழமாக நேசிக்கிறேன் என்பதையும் நினைத்துப் பாராமல் இப்படி அழகுக்கு முக்கியத்துவம் கொடுத்துப் பேசுகிறாளே' என்ற ஆற்றாமையில் துவண்டு போனான் கணேசன்.

''கன்னங் கரேலென்று... கை கால்கள் சதைப் பற்றின்றிக் குச்சி குச்சியாக... கன்னத்து எலும்புகள் துருத்திக் கொண்டு... கனமான சோடா புட்டிக் கண்ணாடியுடன் உங்களைப் போல ஒரு 'மினியேச்சரை' என் மடியில் கற்பனை செய்து பாருங்கள்—வேடிக்கையாயில்லை....'' என்று கேட்டு இகழ்ச்சியாக நகைத்த நிர்மலா அதுவரை அடக்கி வைத்திருந்த ஆத்திரம் பீறிட, முகம் சிவக்கக் கேட்டாள்: ''என்ன ஸார்... முகத்தைச் சுளிக்கிறீர்கள்... உள்ளதைத் தானே சொன்னேன் — தலைவாரிக் கொள்ளும் போது கண்ணாடியில் பார்ப்பீர்களல்லவா?''

'சுளீர்.... சுளீர்' என்று சாட்டையடியாக வந்து விழுந்த வார்த்தைகளின் தகிப்பைத் தாங்க மாட்டாதவனாகச் சரேலென அலுவலகத்தை விட்டே வெளியேறினான் கணேசன்.



அதன் பின் மீண்டும் அந்த அலுவலகத்தினுள் நுழையவேயில்லை அவன். வடக்கே வெகு தொலைவிலிருந்த ஒரு கிளைக்கு மாற்றல் வாங்கிக் கொண்டு போய்விட்டான்.

அன்று போனவன் இன்றுதான் மறுபடியும் தமிழ் நாட்டுக்கு வருகிறான்.

பம்பாய் தலைமையகத்திலிருந்து வந்திருக்கும் இன்ஸ்பெக்ஷன் அதிகாரி என்ற முறையில் தடபுடலான வரவேற்போடு மதுரை அலுவலகத்தினுள் நுழைந்தான்.

கண்ணில் பட்டவர்களெல்லாம் புதியவர்களாக இருந்தார்கள். அங்கங்கே ஓரிரு பழைய முகங்கள். நிர்மலாவைக் காணோம். மனத்தில் நிராசை கவ்வத் தொடங்கியது.

இன்ஸ்பெக்ஷன் சம்பந்தப்பட்ட வேலையைத் தொடங்கிவிட்ட பின் வேலை மும்முரத்தில் நிர்மலாவை மறந்து போனான்.

பிற்பகலில் ஒரு ஃபைலில் சில விளக்கங்கள் கோரி அவன் குறிப்பு அனுப்பியபோது, அந்த ஃபைலை எடுத்துக் கொண்டு அவன் இருந்த அறையினுள் வந்தாள் நிர்மலா

அந்த எதிர்பாராத சந்திப்பில் கணேசனின் இதயம் ஒரு கணம் நின்று பின்னர் வேகமாகத் துடிக்கத் தொடங்கியது.

நிர்மலா ரொம்பவும்மாறிவிட்டிருந்தாள்.

அந்தக் கம்பீரத்தைக் காணோம். சித்திரை மாதத்து உச்சி நிலவாகப் பொலிவுடன் விளங்கிய அவளுடைய வதனம் மலை வாயிலில் விழுந்து கொண்டிருக்கும் மங்கிய நிலவாகச் சோபை இழந்து கிடந்தது.

மதுரையில் அவளை மீண்டும் சந்திக்க நேர்ந்ததால் பழைய சம்பவங்களின் தொடர்பில்லாமல், முன் பின் அறிமுகமில்லாத அந்நிய நபராக நடந்து கொள்ள வேண்டும் என்று பம்பாயை விட்டுப் புறப்படும்போதே தீர்மானித்து வைத்திருந்தான். அது சாத்தியமாஎன்ற கேள்வி வழியெல்லாம் அவனைச் சஞ்சலப்படுத்திக் கொண்டே இருந்தது. ஆனால் இப்பொழுது அது ஒரு பிரச்னையே அல்ல என்று பட்டது. தன் நினைவில் நிற்கும் 'ராணி' நிர்மலாவும் இதோ எதிரே நிற்கும் 'சாதாரண' நிர்மலாவும் இரு வேறு பெண்களாகவே தோன்றினர் அவனுக்கு.



''நீங்கள் கேட்ட விளக்கங்களைக் குறித்திருக்கிறேன் ஸார்'' — அவன் நீட்டிய ஃபைலை வாங்கிப் படித்தான் கணேசன். பின்னர் தனக்குத் தேவையான சில மேல் விளக்கங்களையும் அவளிடம் கேட்டுத்தெரிந்து கொண்டான்.

''தாங்க்யூ... நீங்க போகலாம்'' —அவன் நீட்டிய ஃபைலை வாங்கிக் கொண்டு நகர முற்பட்டாள் நிர்மலா.

அப்போது—

அதுவரை அடக்கிவைத்திருந்த உணர்ச்சிப் பிரவாகம் சட்டென்று கரையை உடைத்துக் கொண்டு விடவே, நிலைகுலைந்து போன நிர்மலா விம்மி விம்மி அழலானாள்.

கணேசன் இதைக் கொஞ்சமும் எதிர்பார்க்கவில்லை.

''அன்றைக்குக் கடுமையான வார்த்தைகளைப் பேசி உங்கள் மனத்தைப் புண்படுத்தி விட்டேன் ஸார்....''

''எப்போதோ நடந்து முடிந்துபோன சம்பவம்... அதை இப்போது மனத்தில் வைத்துக் கொண்டு....''

''சம்பவம் பழசுதான் ஸார்... ஆனால் முடிந்துபோன விஷயமில்லை அது... அச் சம்பவத்தின் விளைவுகள் இன்னும் பின் தொடர்ச்சியாகத் தொடர்ந்து கொண்டிருக்கின்றன!'' என்றாள் நிர்மலா.

நிர்மலா எதைக் குறிப்பிடுகிறாள் என்று புரியாமல் அவளை ஏறிட்டுப் பார்த்தான் கணேசன்.

''நான் எதையுமே மனத்தில் வைத்துக் கொள்ளவில்லை....'' என்றான் பொதுவாக.

நிர்மலா விடவில்லை.

''என்னுடைய ஆறுதலுக்காக அப்படிச் சொல்கிறீர்கள் என்று எனக்குத் தெரியும் ஸார்....! நிஜத்தைச் சொல்லுங்கள்— அந்தச் சம்பவம் உங்களைப் பாதிக்கவே யில்லையா?''

கணேசன் திணறினான்.

அன்று—

அக்னித் துண்டங்களாக வந்து விழுந்த நிர்மலாவின் வார்த்தைகளைத் தாங்க மாட்டாமல் கனத்த உள்ளத்துடன் வீடு போய்ச் சேர்ந்தவன் நேரே கண்ணாடியின் முன் போய் நின்றான்.

எதிரில் தெரிந்த பிம்பம் மிக மிக அந்நியமாகத் தோன்றியது அவனுக்கு.

ஒரு பெண் விமரிசித்த கோணத்தில் தன் 'அழகை' ஆராய்ந்தபோது தன் மீதே ஒரு வெறுப்பு தனக்குள் மண்டுவதை உணர்ந்தான். அதன் பிறகு—

மறுபடியும் ஒரு மனச் சரிவுக்கு ஆளாகி விடக் கூடாது என்று உறுதி பூண்ட அவன் தன்னுடைய பர்சனாலிட்டியை ஒரு பெண்ணின் விமர்சனத்துக்கு உட்படுத்த விரும்பவில்லை.

விளைவு— இன்றைக்கும் அவன் ஒரு பிரம்மச்சாரி.

மௌனமாக இருந்தான்.

''நீங்க ஏன் ஸார் இன்னமும் திருமணம் செய்து கொள்ளவில்லை?'' — நேரடியாகவே கேட்டு விட்டாள் நிர்மலா.

அவள் ஏற்கனவே எதற்காகவோ நொந்து போயிருக்கிறாள். உண்மையைச் சொல்லி அவள் மனத்தை மேலும் நோகடிக்க அவனுக்கு இஷ்டமில்லை. தொடர்ந்து மௌனம் சாதித்தான்.

''நீங்க பதில் சொல்ல மாட்டீங்க ஸார்... 'நீதான் காரணம்'னு முகத்தில் அடித்தாற் போல் நிஜத்தைச் சொல்ல உங்கள் பெருந்தன்மை இடம் கொடுக்காது. ஆனால் நான்? அன்று கௌரவமான முறையில் நீங்கள் என்னிடம் உங்கள் விருப்பத்தை வெளியிட்டபோது 'எனக்கு இஷ்டமில்லை' என்று சாந்தமாகவே சொல்லி யிருக்கலாம். ....அழகாக இருக்கிறோம் என்ற அகந்தை... எத்தனை பேராசை இவருக்கு என்ற ஆத்திரம்... ஒரு நல்ல இதயத்தைக் கிறணமாக்குகிறோமே என்ற பிரக்ஞை இல்

## எண்ணிய நான் எண்ணியவாறு...

வத்தலகுண்டில் ஒரு திருமணம். பெரியவர் மதுரையை அடுத்த திரு நாராயணபுரத்தில் இருப்பதாகச் சொன்னார்கள். உடனே என் மனைவியையும் பையனையும் (எட்டு வயது) அழைத்துக் கொண்டு மதுரைக்குப் புறப்பட்டேன்.

பெரியவர் என் பக்கத்தில் இருந்த என் பையனைப் பார்த்து ''என்ன பேர்?'' என்றார்.

என்னை அறியாமல் நானே பேசினேன். ''நீங்கள் சுமார் இருபது வருடங்களுக்கு முன் லால்குடி வந்திருந்தேளே. அபிஷேகத்திற்கு டாக்டர் காரில் திருச்சியிலிருந்து பாலைக் கொண்டு வருவேனே. நீங்கள் அந்தப் பசு மாட்டுக்கொட்டகையில்படுத்திருப்பேளே என்றேன். உங்கள் ஞாபகமாய்த்தான் இவனுக்கு சந்திரசேகரன் என்று பெயர் வச்சிருக்கேன்''என்றேன்.''இவனை ஆசீர்வதியுங்கள்'' என்று அழுதேன்.

பெரியவர் என் பையன் மேல் இரு கரங்களையும் உயர்த்தி ''நாராயணா, நாராயணா'' என்றார். சிறிது நேரத்தில் காவி உடையைப் போர்த்தி ஒரு பக்கமாய்த் திரும்பிக் கண்களை மூடிப் படுத்து விட்டார்.

சந்திரசேகரன் படிப்பில் முதல் நிலையில் வர ஆரம்பித்தான். ஏராளமான ஸ்காலர்ஷிப் பெற்றான். இன்ஜினீயரிங்கில் முதலில் பாஸ் செய்தான். டெல்லியில் விருது பெற்றான். பாம்பே டாடா இன்ஸ்டிடியூட்டில் ஆபீசர் ஆனான். ஆறு மாதத்திற்கு முன் அமெரிக்காவிலிருந்து ஃபெலோஷிப் கிடைத்தது. வெளிநாடு போகுமுன் நண்பர் இராமச்சந்திர அய்யர் சந்திரசேகரனை காரில் சத்தாரா அழைத்துச் சென்று அவர் ஆசியை மறுபடி வாங்கிக் கொடுத்தார்.

எண்ணிய நான் எண்ணியவாறு எனக்கு அருளும் தெய்வம், காஞ்சிப் பெரியவாள். குரு சாக்ஷாத் பரமேஸ்வர ஸ்வரூபம்.

-எல். ஏ. வி. ராமன்



லாமல் கண் மூடத்தனமாக வார்த்தைகளை அள்ளி வீசிவிட்டேன். அந்தப் பாவம்தான் ஸார் இன்றைக்கும் என்னைச் சுட்டெரித்துக் கொண்டிருக்கிறது.''

நிர்மலாவின் வார்த்தைகளைக் கேட்ட கணேசனுக்கு ஏதோ அசம்பாவிதம் நிகழ்ந்து விட்டிருக்கிறது என்று புரிந்ததே யன்றி அது என்ன என்று விளங்கவில்லை.

அவளை ஏறிட்டுப் பார்த்தான்.

கழுத்தில் கிடந்த மங்கல நாணும், பளிச் சென்று நெற்றியில் துலங்கிய குங்குமமும் விபரீதமாக எதுவும் நடந்துவிடவில்லை என்று பறைசாற்றின. பின்னே — அவளுக்கு வாய்த்த கணவன் சரியில்லையோ... ஒரு வேளை என்னைப் போல் அவனும் அழ கற்றவனோ? ஆமாம்... அப்படித்தானிருக்க வேண்டும்! ஆனால் அதற்காக ஒரு பெண் இப்படி காய்ந்து போவாளா... என்ன?— இப்படியாகக் கணேசனின் எண்ண ஓட்டம் தொடர்ந்தபோது நிர்மலா மேலே பேச லானாள்:

''எனக்கு ரோஜா மொக்குப் போல அழ கான குழந்தை பிறக்கணும்... அதை ஆசை தீர மடியில் போட்டுத் தாலாட்டணும்னு கனவு கண்டேன்.... அந்தக் கனவு — இன் றைக்கும் கனவாகவேநிலைச்சுப்போச்சுஸார்''

கணேசனுக்குப் பொறி தட்டினாற்போல் இருந்தது. திடுக்கிட்டுப் போய் நிமிர்ந்து உட்கார்ந்தான்.

''அழகான குழந்தைக்கு உத்தரவாதம் தர முடியுமான்னு உங்களிடம் அகங்காரமா கக் கேட்டேனில்லையா அன்றைக்கு... அதற் குத் தண்டனைதான் இது— அழகில்லா விட் டாலும் பரவாயில்லை... எனக்குன்னு ஒரு குழந்தை பிறக்காதான்னு நானெல்லாம் ஏங்கி ஏங்கி வெந்து கொண்டிருக்கிறேன் இன்றைக்கு...''

—முகத்தை மூடிக் கொண்டு விசிக்க லானாள் நிர்மலா.

அன்றைக்கு அவளுக்கு ஏற்பட்டகோபமும் ஆத்திரமும் - நியாயமானதுதான் என்று பாதிக்கப்பட்ட அவனே ஏற்றுக்கொண்டு விட்ட பிறகு அது எப்படி தண்டனைக்குரிய குற்றமாக இருக்க முடியும்?

'பின்னே..இவளுக்கு ஏன்குழந்தைஇல்லை?'

இந்தக் கேள்விக்கு ஒரு பதில் கிடைக் காமல் அவன் திணறிக் கொண்டிருந்த போது, அன்றொரு நாள் பம்பாயில் தன் வீட்டுத் தோட்டத்தில் பூப்பறிக்க வந்த பக்கத்து வீட்டுச் சிறுமி கேட்டது சட்டென்று அவனுடைய நினைவுக்கு வந்தது:

'அங்கிள்... இந்த ரோஜா இத்தனை அழகா.... மணமா இருக்கே, ஏன் காய்க்க மாட்டேங்குது?'

தன் வாழ்வில் தொடர்ந்து கொண்டிருக் கும் வெறுமைக்கும் நிர்மலாவின் வாழ்வில் நேர்ந்திருக்கும் அவலத்துக்கும் அந்தச் சிறுமியின் கேள்வியில் பதில் இருப்பதாக நினைத்தான் கணேசன்.

'ஆமாம்—

செடிகள் எல்லாமே பூப்பதுமில்லை....

பூக்கள் எல்லாமே காய்ப்பதுமில்லை....'

வேதனையோடு பெரு மூச்செறிந்தான் கணேசன்.



இந்த வார டி. வி. சினிமா



## வண்டிச் சக்கரம்

விவேகானந்தா பிக்சர்ஸ் அளிக்கும் 'வண்டிச்சக்கரம்' இந்த ஞாயிற்றுக்கிழமை (17 — 5 — 81) சென்னை டி. வி. யில் திரையிடப்படுகிறது. பத்திரிகை விமர் சனங்களிலிருந்து சில துளிகள் :

### குங்குமம்

கையை மடித்து விட்ட மல் ஜிப்பா, தொரட்டிமீசை, முரட்டு முடி, பீடி அல்லது சிகரெட் புகையும் வாய், மைனர் செயின் சகிதமாக கைலியை மடித்துக் கையில் பிடித் துக்கொண்டு ராஜா மாதிரி சாராயக் கடைக்குள் நுழைந்து ஸ்பெஷல் சரக்கைப் போட்டுக் கொண்டதும் படு அலட்சியமாகப் பார்க்கும் ''தண்டல் நாயகர்'' கஜாவாக சிவகுமார் — வித்தியாசமான குமார்தான்.

### தினத்தந்தி

கதை வசனம் எழுதிய வினு சக்கரவர்த்தி சிவகுமாரின் நண்பனாகவும் நடித்திருக்கிறார். குடிசைவாசிகளின் பாஷையைத் தப்பாது பேசுகிறார்.

டைரக்டர் கே. விஜயன், பக்கா ரௌடி கூட மனைவியின் அன்புக்குக் கட்டுப்படு வான் என்பதைக் காட்டும்போது, தன் மனைவிமேல் களங்கம் சுமத்தியவன் மீது கதாநாயகன் பாயும்போதும், உறுமும் புலி யைக் காட்டுவதும் குறிப்பிடத்தக்கவை.

### குமுதம்

ரப்பர் தலையணையைப் பிய்த்துப் பிய்த்துத் தண்ணீரில் தோய்த்துத் தின்று முடிக்கிறார் கருணிராஜன். அடுத்துச் சில 'டை'களையும் காலி செய்கிறார். அவர் பசி அவருக்குத் தெரியும். திருடப் போன இடத்தில் மறியல் ஏற்பட்டுக் கடையை மூடிவிடுகிறார்கள் என்று அவர் கண்டாரா என்ன?

தொகுப்பு: சிக்கி



## கண்கண்ட தெய்வம்

இராணுவத் துறையில் சிவில் அதிகாரியாகப் பணி செய்து வந்த எனக்குத் திடீரென்று ஓர் அதிர்ச்சி காத்திருந்தது. என்னுடைய கண்களின் பார்வை துரிதமாகச் சீரழிந்து அடியோடு பார்வை போய்விட்டது. சென்னையில் உள்ள பெரிய கண் சிகிச்சை நிபுணர்கள் கைவிரித்து விட்டார்கள். ஏழு வருடங்கள் ஓடின. இரு கண்களும் இல்லாத குருடனாய், பெரிய குடும்ப பாரத்துடன் தத்தளித்துக் கொண்டிருந்தேன். கையிலிருந்த பணமும் நகை நட்டுக்களும் கரைந்தன. வேலையும் போய்விட்டது. சொல்லொணாத் துயர்களை அனுபவித்துக்கொண்டு பெரியவாளையே தியானம் செய்து கொண்டிருக்கும் தருணத்தில் ஹைதராபாத்திலிருந்து நண்பர் டி. ஸ்ரீ. கே. மூர்த்தி திடீரென்று வந்து மறுநாள் காஞ்சிபுரத்துக்கு அழைத்துச் சென்றார். பெரியவர் அவரது கனவில் என்னை உடனே காஞ்சிபுரத்திற்கு அழைத்து வரும்படி ஆக்ஞாபித்ததைத் தெரிவித்தார். மறுநாள் காஞ்சிபுரத்துக்குச் சென்றோம்.

ஸ்ரீ பெரியவா ஸர்வ தீர்த்தத்துக்கு அருகில் பர்ணசாலை அமைத்து, அதில் அமர்ந்திருந்தார். சமிக்ஞை மூலம் அருகில் வரும்படி உத்தரவிட, மூர்த்தி என்னைக் கைப் பிடித்துக் கொண்டே பெரியவாளின் திவ்விய சமூகத்துக்கு அழைத்துச் சென்றார்.

என் மனைவியிடம் 'நீங்கள் யாவரும் சென்னைக்குத் திரும்புங்கள். ஸ்ரீனிவாசன் இரண்டு கண்களும் ஆபரேஷன் ஆகி நன்றாய்க் கண் தெரிந்தவுடன் வருவான்' என்று அனுக்கிரகித்து நண்பர் மூர்த்தியையும் உடனே ஹைதராபாத்துக்குத் திரும்பும்படி அனுக்ரஹப் பிரகாசத்துடன் உத்தரவிட்டார்.

காஞ்சிபுரத்திலேயே தொழில் நடத்தும் டாக்டர் வெங்குடி பாலசுப்பிரமண்யத்திடம் அன்றே அழைத்துச் செல்லப்பட்டேன். அவர் பெரியவாளிடத்தில் தாம் கொண்ட பக்தியின் பலத்தால் சென்னையில் பிரபல நிபுணர்களால் கைவிடப்பட்ட எனக்குக்கண் ஆபரேஷன் செய்ய ஆயத்தங்களைச் செய்து விட்டார். முதலில் வலக் கண்ணைத் தைரியமாக ஆபரேஷன் செய்தார். கிட்டத்தட்ட மூன்று மணி நேரம். மூன்றும் நாள் கட்டை அவிழ்த்து, 'பட்டை' போட்டிருக்கும்போது நர்ஸிங் ஹோம் வாசலில் பெரியவா வந்து நின்றுகொண்டு விசாரிக்க, ஆச்சர்யம் அடைந்த டாக்டர்மெதுவாகக் கைப்பிடித்து, பெரியவாளின் அருகில் அழைத்துச் சென்று, பட்டையை விலக்கிப் பார்க்கச் சொல்ல, ஏழு வருஷங்களுக்குப் பின் முதன் முதலாக நான் கண்ட காட்சி பெரியவாளின் திருவுருதான்! என் மகிழ்ச்சியை எப்படி விவரிப்பேன்!

அடுத்த 15 நாட்களில் மறு கண்ணையும் ஆபரேஷன் செய்ய அங்கேயே டாக்டருக்கு உத்தரவு பிறப்பித்துவிட்டார் பெரியவாள்.

டாக்டர் அவ்வாறே செய்ய என்ன ஆச்சரியம்! இரு கண்களிலும் பூர்ண பிரகாசம் ஏற்பட்டு, இழந்த பார்வைகளை மீண்டும் பெற்றேன்! மேஜர் ஆபரேஷனும் இருந்தும் ரணம் மூன்று அல்லது நான்கு நாட்களுக்குள்ளேயே சொஸ்தமாகி விட்டது! பெரியவாளின் கருணையே கருணை!

—என். ஸ்ரீனிவாசன்



## மாங்கல்யப் பிச்சை

நன்றாக இருந்த என் கணவருக்கு ஒருநாள் திடீரென்று உடம்பு ஊதிவிட்டது. டாக்டரிடம் காண்பித்ததில் உப்பு கூட என்று வைத்தியம் செய்தார். மந்திரிப்பவர் ஊது காமாலை என்று மந்திரித்தார். ஆனால் என்ன செய்தும் உடம்பு பருமன் குறையவில்லை. ஒன்றும் தோன்றாமல் பெரியவாளிடம் என் மைத்துனரை அனுப்பினோம். பெரியவாளுக்கு அன்று கண் ஆபரேஷன். ஆயினும் என்ன? கருணையோடு அவர் இந்த விஷயத்தைத் தெரிந்து கொண்டு என் மைத்துனரை இருக்கும்படி சொன்னார். அவரும் ஆபரேஷனுக்கு மறுநாள் விபூதி, குங்குமம், திராட்சை கற்கண்டு பிரசாதம் பெற்றுத் திரும்பினார். பிரசாதத்தை என் கணவர் சாப்பிட்டதும் மறுநாள் காலையிலிருந்து படிப்படியாக உடல் பருமன் குறைந்து இன்று நன்றாக இருக்கிறார். எல்லோரும் கைவிட்ட கேஸ். யாரும் என் கணவர் பிழைப்பார் என்றே நம்பவில்லை. எனக்கு மாங்கல்யப் பிச்சை கொடுத்த நடமாடும் தெய்வத்தை சதா நினைத்துக் கொண்டேயிருக்கிறேன்.

-வி. மீனாக்ஷி







# குருவும் சீடரும்

சதாராவில் தற்போது முகாமிட்டுள்ள காஞ்சி காமகோடி பீடாதிபதி ஜகத்குரு ஸ்ரீ ஜயேந்திர சரஸ்வதி சங்கராச்சார்யஸ்வாமி களிடம், ''பட்டத்துக்கு வாரிசாகத் தாங்கள் ஏற்றுக்கொள்ளப்பட்ட நாளிலிருந்து இன்றுவரை பெரியவாள் தங்களுக்குக் குருவாய் இருந்து, எப்படி எப்படிப் பல விஷயங்களையும் கற்பித்துத் தங்களை வாரிசாக உருவாக்கினர் என்று கூற வேண்டும்'' என விண்ணப்பித்துக் கொண்டோம். ஸ்ரீ ஜயேந்திர சரஸ்வதி ஸ்வாமி அளித்த அபூர்வமான தகவல்கள்:-

**"நா**ன் பீடத்துக்கு வந்துஇருபத்தி ஏழு வருஷங்கள் பூர்த்தியாகி இருபத்தி எட்டாவது வருஷம் பிறக்கப் போகிறது. காஞ்சிபுரத்துலே சர்வதேசக் கரையிலே விஜய வருஷம் கொடுத்தார். அன்னிலேயிருந்து பெரியவாள் க்ரமமா பயிற்சி அளித்து வந்தார்.

''முதல்ல சுவாமிகளா இருந்து மந்திரா னுஷ்டானங்கள் எல்லாம் செய்து எப்படி இருக்கணும்னு சொல்லிக் கொடுத்தார்... முதல் ஒரு வருஷம் அனுஷ்டானங்கள் மட்டும்தான். பிறகு வேதாந்தப்பாடங்கள்... ரெண்டு வருஷம், மத்தியான, சாயங்கால வேளைகளில் வேதாந்தப் பாடங்களை அவரே நடத்தியிருக்கிறார். ஆதி சங்கரரோட நூல்களையெல்லாம் அவரே சொல்லித் தருவார்.

''பூஜைகள், மடத்து விவகாரங்கள் எல்லாம் இந்தச் சமயம் ஒன்றும் சொல்லித் தரலே. அதுக்கப்புறமா மெட்ராஸ் வந்தோம். கொஞ்சம் கொஞ்சமா லௌகிகமா பழக்க வழக்கங்கள் ஆரம்பிச்சுது. ஆன போதிலும் கூட, உபந்நியாசம் எப்படிப் பண்றதுன்னுதான் மொதல்ல சொல்லிக் கொடுத்தார். ஒரு ஸ்லோகம் சொல்லி அதற்கு அர்த்தம் சொல்லி இது மாதிரி சொல்லணும்னு சொல்லிக் கொடுத்தார்.

''மெட்ராஸ்ல இருக்கறப்பவே பூஜை செய்யறதுக்கும் பழக்கப்படுத்தினர். அவரோடு சேர்ந்து நானும் பூஜை செய்வேன்.

''பிறகு இளையாத்தங்குடிக்குப் போனோம். அங்கே பண்டிதர்களை வைத்து தர்க்க சாஸ்திரம், வேத சாஸ்திரம் ஆகியவைகளைக் கற்பித்தார். அப்பவும் கூட அவரேதான் பூஜை செய்வார். ஒருவேளை பூஜையிலே மட்டும் நானும் கலந்துப்பேன்...

''அப்புறம்தான் மடத்து விவகாரங்கள், கரஸ்பாண்டன்ஸ் என்னன்னு சொல்லிக் கொடுத்தார். கடுதாசி எப்படி எழுதறது, எது எதுக்கு எப்படிப் பதில் எழுதணும்னு எல்லாம் சொல்லிக் கொடுத்தார். இளையாத்தங்குடியிலதான் லௌகிகமா இது மாதிரிப் பயிற்சி கொடுத்தார்.

''இப்படியாக 1970ம் வருஷம் வரையிலும் அவரும் கூடவே இருந்து அனுஷ்டானங்கள், பூஜைகள், ஆகார நியமங்கள், ஆசன அப்பியாசங்கள், படிப்புகள், லௌகிக விஷயங்கள், உபந்நியாசங்கள் ஆகிய பலவற்றையும் ஒண்ணு ஒண்ணச் சிறப்பாக் கற்பிச்சார்.

''இது இது இப்படிச் செய்யணும்,' இப்படித் திருத்திக்கணும்னு சொல்லிண்டே இருப்பார். அதோடு மட்டுமில்லாம, தமிழ் நாடு, ஆந்திராவிலே யாத்திரைகளுக்கும் கூடவே அழைச்சுண்டு போய்ப் பழக்கப் படுத்தினர்.

''அப்புறம்தான் 'நான் தனியாபோறேன்'னுர்.... 1970ம் வருஷம்தான் தனியாப் போறேன்னு சொன்னாலும் கூட, நான் மடத்துக்கு வந்த மூணும் நாள்லேர்ந்தே 'நான் தனியாப் போகணும்... அதுக்குத்தான் உன்னை வெச்சேன்' என்று சொல்லிண்டே இருப்பார்.





## தெய்வாநுக்கிரகம்

என் மாமனாரோடு பெரியவாளைத் தரிசிக்கச் சென்றேன். என்னுடைய கர்ப்பிணியான மனைவியும் ஏழு வயது மகளும் வந்தனர். காஞ்சிபுரம் நகரத்துக்கு வெளியே எனது மாமனார் காரை விட்டிறங்கி இயற்கை உபாதை கழிக்கச் சென்றார். நானும் இறங்கிச் சென்றேன். காரை விட்டிறங்கி என் மகளும் "அப்பா" என்று எங்களை நோக்கி ஓடிவந்தாள். அந்தச் சமயம் பயங்கரமாக அசுர வேகத்தில் வந்த கார் என் மகளைப் புரட்டித் தள்ளி விட்டது. உள் காயம், வெளிக் காயம் தவிர ஒரு கண்ணே வெளியே வந்து விட்டது. கார்க்காரன் ஓடிவிட்டான். அந்தப் பாதையில் வந்த எந்தக் கார்காரனும் எங்கள் உதவிக்கு வரவில்லை. அச்சமயம் ஒரு அமெரிக்கப் பெண்மணி, காரில் வந்தவள், எங்களைக் காஞ்சிபுரம் அழைத்துச் சென்று உதவினாள். ஓர் அமெரிக்கப் பெண்மணியே ஆஸ்பத்திரிக்கு வந்திருப்பதைக் கண்டு ஆஸ்பத்திரி டாக்டர்கள் என் மகளுக்குச் சிகிச்சை செய்ய முன் வந்தனர். தங்களால் முடிந்த அளவு கவனித்துவிட்டு 'இவளை உடனே சென்னை ஜெனரல் ஆஸ்பத்திரிக்கு எடுத்துச் செல்லுங்கள். பயங்கர அடியில் குழந்தை பிழைப்பது கடினம்!' என்று கூறினர். அவ்வாறே செய்தோம். அங்கு சிகிச்சை செய்த டாக்டர்களும் குழந்தைக்குப் பட்டிருந்த பயங்கர அடியைப் பார்த்துக் கைவிரித்தனர். எனது மைத்துனர் தியாகராஜன் காஞ்சிப் பெரியவாளிடம் சென்று கதறி அழுதான். யாரோ ஒரு பக்தர் பெரியவாளுக்கு ஆப்பிள் பழம் கொணர்ந்து தந்தார். பெரியவாள் அந்த ஆப்பிள் பழத்தின் மீது அபிஷேக ஜலத்தைத் தெளித்து. 'இந்தா! இதைக் கொண்டு போய்க் கொடு. குழந்தை பிழைத்து எழுந்து விடுவாள்!' என்று ஆசீர்வதித்துத் தந்தார். பெரியவாளின் ஆசீர்வாதம் அற்புதமாக வேலை செய்தது. அந்தப் பழத்தை ருசித்த குழந்தை, டாக்டர்களும் ஆச்சரியப் படும்படியாகக் கிடு கிடு வென்று உடல் நலம் தேறிப் பிழைத்து எழுந்தாள்! பெரியவாளின் ஆசீர்வாத பலத்தை நானும் நன்கு உணர்ந்தேன்!

— குப்புசாமி.

"நான் மடத்துக்கு வரதுக்கு முன்னாடியே, என்னை மடத்துக்குக் கேட்டப்பவே, 'நான் தனியாப் போகணும்னு இருக்கு... அதுக்குத்தான் ஒரு பையனை வெக்கணும்'னு சொல்லிண்டிருப்பாராம்!

"நான் மடத்துக்கு வந்தப்புறம், 'நீங்க கொஞ்ச நாள் கூடவே இருக்கணும்... விட்டுட்டுப் போயிடக் கூடாது'ன்னு பிரார்த்திச்சண்டோம். ஒத்துண்டார். ஆனாலும் 'நான் தனியாப் போகணும்'னு அடிக்கடி சொல்லிண்டே இருப்பார்.

"நடுவுலே என்னையே பூஜை முதலியவை செய்யச் சொல்லிட்டு அங்கே இங்கே போவார். நாங்க போய் வேண்டிப்போம். திரும்ப வருவார்....

"1970ம் வருஷத்துக்கு அப்புறம்தான் 'பரிபூரணமாவே ஒய்வா நான் இருக்கேன்'னு சொல்லிட்டுக் காஞ்சீபுரத்துக்குப் போனார். அவரோட நானும் காஞ்சீபுரத்திலே 73ம் வருஷம் வரையிலே இருந்தேன்.

"நடுவிலே சின்னச் சின்ன யாத்திரை போயிட்டு வான்னு அனுப்புவார். 'திருவானைக்காவல் போயிட்டு வா...' ன்னார். இது மாதிரி வேறு இடங்களுக்கும் அனுப்பினார். திரும்பி வந்ததும் ஒவ்வொண்ணையும் சின்ன டெஸ்ட் மாதிரி வெச்சு விசாரிப்பார். அவருக்குத் திருப்தி இருந்தது. தனியாகப் போனால் சமாளிப்பேன்னு நம்பிக்கை வந்தது.

"1973க்கு அப்புறம்தான் வட நாட்டு யாத்திரை. யாத்திரை போயிட்டு வந்ததும் எல்லாத்தையும் கேட்டுத் தெரிஞ்சுண்டார்.

"இன்னி வரைக்கும் சதாராவிலே இருக்கிற இந்த நிமிஷம் வரை அவரோட திருப்தி, அவரோட சம்மதம் தெரிஞ்சு சாஸ்திரத்துக்கு விரோதமில்லாம பண்ணிண்டு இருக்கோம்.... இப்பவும் சில விஷயங்கள்லே எப்படி இருக்கணும்னு சொல்லுவார். அவர் சொல்ற மாதிரிதான் நடந்துக்கறோம்.... கோபம்றது எந்தச் சமயத்துலேயும் அவரோட ஆயுசிலேயே கிடையாது...

"லோகத்துலே ஜனங்கள் படற பலவித கஷ்டங்களையும் கேட்டுட்டு அதற்கான நிவர்த்திக்குத் நம்மால் செய்ய முடிஞ்சதைப் பத்தி அடிக்கடி சொல்றார்.

"நல்ல எண்ணங்கள் இருந்தால் நல்ல காரியங்கள் நடக்கும் என்று பலருக்கும் சொல்லச் சொல்லி வருகிறார்.

"முன்பெல்லாம் அவராவே புதுப் புதுத் திட்டம் போட்டு அவரே முன்நின்று நடத்தி வைப்பார். இப்பவும் அவர் புதுசு புதுசா 'ஸ்கீம்' போடறார். ஆனாலும் என்னைக் கூப்பிட்டனுப்பி அந்தத் திட்டங்களைக் கூறி இது மாதிரி செய்யணும்னு சொல்றார். அவரோட பிரியப்படி நான் நடத்தி வைக்கிறேன்..."

வெள்ளைச் சிரிப்புடன் தேஜஸ் பொங்க ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதி கூறுவதைக் கேட்கும்போது "ஜகத்குரு" என்ற சொல்லுக்கும் "குரு பக்தி" என்ற தொடருக்கும் அர்த்தம் நமக்கு முழுமையாகப் புரிகிறது.

நாயகன்

# எந்த நடிகரைச் சந்திக்க ஆசை?

✖ நெ. முகம்மது மக்தூம், துடியலூர்

கே: தர்க்கம், குதர்க்கம்-விளக்கம் தேவை (ஒரு கண்டிஷன்: விளக்கம் அருமையாகவும் அறுவையாகவும் இருக்கவேண்டும்.)

ப: தர்க்கம், குதர்க்கம் — வாதம், விதண்டா வாதம்! இதுதான் விளக்கம் (என்றால் அருமையாகத்தான் பதில் சொல்ல முடியும். 'அறுவை' எனக்கு வராது என்று தெரிந்தும் ஏன் இப்படி நிபந்தனை போடுகிறீர்கள்!)

✖ டி. சிவமுருகன், தென்காசி

கே: கம்ப்யூட்டர்கள் மனிதனை ஆட்டிப்படைக்கும் காலம் வரும் என்று நம்புகிறீர்களா?

ப: நம்பவில்லை. காப்பி, சினிமா போன்றவைகளுக்கு அடிமையானது போல் கம்ப்யூட்டருக்கு மனிதன் ஓரளவு அடிமையாகக் கூடும். ஆனாலும் அதை இவன்தான் ஆட்டிப் படைப்பான். எத்தனை விஞ்ஞான முன்னேற்றம் ஏற்பட்டாலும் மனிதனை எதுவும் ஆட்டிப் படைக்க முடியாது. — ஆண்டவன் என்ற ஒரு சக்தியைத்தவிர.











**கடுகு பதில்கள்**

ப: நாகேஷை. அவரது கருத்துக்களும் தத்துவங்களும் எனக்குப் பிடித்தமானவை. அவருடன் நீண்ட நேரம் சம்பாஷிக்க விருப்பம்.

✖ கே. லக்ஷ்மி, திருவாரூர்

கே. பாங்க் கவுண்டருக்கு வெளியே ஸ்பான்ஜ் வைத்தால் யாருடனாவது ஒட்டிக்கொண்டு போய் விடாதா?

ப: யானை கட்டும் சங்கிலியை வாங்கி அதில் ஸ்பான்ஜ் டப்பாவை மாட்டி வைத்தால் என்ன? இதையெல்லாம் எடுத்துக்கொண்டு போக மாட்டார்கள். அப்படியே எடுத்துக் கொண்டு போனாலும் அதிக விலை இல்லாத பொருள்; இன்னொன்று வைக்கலாம்.

✖ என். பாலு, திருச்சி

கே. நாடாளுமன்ற நடவடிக்கைகள் விவரங்கள் எங்கு கிடைக்கும்?

ப: லோக் சபா செகரடேரியட்டிலும் அரசாங்கப் புத்தக விற்பனை நிலையங்களிலும் விற்பனைக்குக் கிடைக்கும்.

✖ என். கே. பத்மநாபன், மானம்புசாவடி

கே. ரசிக்கத்தக்க சிலேடை சொல்லுங்களேன்?

ப: விழுந்து விழுந்து ரசிக்கத் தக்க நூறு பர்ஸெண்ட் சொந்த சிலேடை ஒன்றைச் சொல்கிறேன்.

ஒரு சமயம் வையையாற்றில் வெள்ளம் ஏற்பட மதுரைக்கு ஆபத்து ஏற்படும் போலிருந்தது. மன்னன் அரிமர்த்தனன், வீட்டுக்கொரு ஆள் வந்து வெள்ளத்தின் உடைப்பைத் தடுக்கப் பள்ளங்களில் மண் நிரப்ப உத்தரவிட்டான். வந்தி என்ற கிழவிக்குக் கூலியாள் யாரும் கிடைக்காமற்போகவே சோமசுந்தரப் பெருமானை வேண்டிக்கொண்டாள். பிட்டு விற்கும் கிழவிக்கு உதவி புரிய ஆண்டவன் கூலியாளாக வந்து கூடையில் மண் சுமந்து பள்ளத்தில் போட்டார். பள்ளத்தை நிரப்ப மண் சுமந்ததால் அவருக்கு PITக்கு மண் சுமந்த பெருமான் என்ற பெயர் வந்தது.

✖ மு. கலியாணசுந்தர், மேட்டுப்பாளையம்

கே. சுயநலவாதி 'பொதுநலவாதியாகிறாரா? பொது நலவாதி சுயநலவாதி ஆகிறாரா?

ப: ஒரு சுயநலவாதி, பலனுள்ள சுயநலவாதியாவதற்குப் பொதுநலவாதியாகிறான் முதலில். இலவச வீடு, ரயில்வே பாஸ், டெலிபோன், சர்க்கார் உதவித் தொகைகள் இவைகளைப் பெறுவதற்காக எத்தனையோ பேர், 'சமூக சேவகர்'களாக மாறி இருக்கிறார்கள் என்று தெரியாதா?

✖ மாலினிராஜா, சென்னை-17

கே. எந்தத் திரைப்பட நடிகரைச் சந்தித்துப் பேச ஆசை? ஏன்?

✖ சுதா மணிமேகலை, வேலூர்

கே. என் நன்றியை உங்களுக்கு எப்படி தெரிவிப்பது?

ப: வைர மோதிரம், தங்கக் குடம், 'எல்.ஐ.சி. அளவுள்ள சிறிய இல்லம் போன்று எத்தனையோ இல்லையா? 'உள்ளுவதெல்லாம் உயர்வு உள்ளல்' என் பிரின்சிபல்!

பரிசு பெறுபவர் :

டி. சிவமுருகன், 102, ரயில்வே ஸ்டேஷன் ரோடு, தென்காசி 627011




● உங்கள் சினிமா விமர்சகரான ''நளினி சாஸ்திரி'' ராஜ பார்வை படத்தைத்தான் நன்றாகக் கண் திறந்து பார்த்திருக்கிறார். சும்மா பேப்பே, பேப்பே என்று எழுதாமல் கம்பீரமான விவரமான விமர்சனம் அவர் எழுதியிருப்பதைப் பார்க்கும்போது ஆச்சரியமாயிருக்கிறது!
சிவகாசி — இரா. சுரேஷ்குமார்

● நளினி சாஸ்திரியின் ராஜ பார்வையில் ஏதோ கோளாறு. உயர்ந்தவர்களில் கமல் முன்பே குருடனாக நடித்துள்ளார் என்பது அபத்தம். உயர்ந்தவர்களில் ஊமையாகவும் செவிடனாகவும்தான் நடித்துள்ளார்.
சென்னை-14 — வி. ஷோபனு

● 'ராஜ பார்வை' இயக்குனர் சங்கீதம் சீனிவாச ராவ் இல்லை. அவர் பெயர் சிங்கீதம் சீனிவாச ராவ்.
சென்னை-5 — கே. வரதராஜன்

● இவ்வாரம் இடம்பெற்றுள்ள எல்லாச் சிறு கதைகளும் அருமை. குறிப்பாக கிருஷ்ண பிரேமி' சிறுகதை என் நெஞ்சை நெகிழச் செய்து விட்டது. சிறு ஊனமும் இல்லாமல் சிறுகதையை எழுதியுள்ளார் ஜெயகதா.
தஞ்சாவூர் — ரத்தன்

● யாரிடம் பயப்படுகிறார் ஜியா? தெரியவில்லையா? தமது நாட்டு மக்களிடம் பயப்படுகிறார். தமது நாட்டு மக்களுக்கு ஜனநாயக உணர்வுகள் மேலோங்கி தம்முடைய சர்வாதிகார ஆட்சிக்கு 'முடிவு' ஏற்பட்டு விடுமோ என்றுதான் பயப்படுகிறார்.
சென்னை — வி. ஜி. நேசன்

● 'தற்கால தமிழ் நாவல் இலக்கியப் போக்கு' விவாதம் மிகவும் சூடாக இருந்தது. எழுத்தாளர்கள், பத்திரிகையாசிரியர்கள் ஆகியோரைக் குறை கூறி, கடைசியில் அழுத்தமான, ஆழமான எழுத்துக்களை வாசகர்கள் அதிகம் விரும்புவதில்லை என எங்களையும் குறை கூறுவது ஏற்க முடியாது. தரமான கருத்துக்கள் கிடைக்கும் என்று எதிர்பார்த்துத்தான் நாங்கள் படிக்கிறோம்.
வேலூர் — வேணுகோபால்

● பார்வையாளரிலிருந்து கேள்வி எழுப்பி அழகான ஒரு கருத்தையும் தந்த சகோதரி ராக்கினி மேரியின் கருத்து மெத்தவும் சரி.
மேட்டுப்பாளையம் — எம்.பி. ரத்தினகுமார்

● ராக்கினி மேரி, 'பிரச்னைக்குத் தீர்வு காண வேண்டியது சமுதாயத்தின் கடமைதான்' என்கிறார். சமுதாயத்தின் மிக முக்கியமான ஓர் அங்கமாக விளங்குபவன் எழுத்தாளனே. தீர்வையும் சொல்ல வேண்டியது அவனுடைய உரிமையே.
செங்கவல்லி — கி. முருகவேள்

● 'வீர விளக்கு' வ.வே.சு. ஐயர் நூற்றாண்டு நடந்து கொண்டிருக்கும் இத்தருணத்தில், அந்த தேசபக்தரைப் பற்றிய ஒரு சிறு செய்தியைக்கூட வெளியிடாமல், கமலஹாசன் நூறு படம் முடித்ததையொட்டி தொடர்ந்து கேள்வி பதில் வெளியிடும் கல்கியை நினைத்து அழுவதா, சிரிப்பதா என்று தெரியவில்லை.
பண்ருட்டி — கோ. தேவராஜன்

[வ. வே. சு. ஐயர் நூற்றாண்டு விழாவையொட்டி முதல் கட்டுரை கல்கியில்தான் வெளிவந்தது. ரா.அ. பத்மநாபன் எழுதினார். - ஆசிரியர்]

● கமலஹாசனின் பதில்கள் ஒவ்வொன்றும் ஒரு நகைச்சுவைத் துணுக்குப் போல மனம் விட்டுச் சிரிக்க வைக்கின்றன. பேசாமல் அவரை கமலஹாஸ்யன் என்று பெயரை மாற்றிக் கொள்ளச் சொல்லுங்கள்.
அரகண்டநல்லூர் — கே. பிரதாப்சிங்

● மந்திரவாதிகளால் மட்டுமே கண்டு பிடிக்க முடிகின்ற ''ஜோக் எழுதுங்கள்'' போட்டி வைத்த உம்மை ஒரு வார காலத்திற்குக் கோடை வெய்யிலில் தான் வறுத்தெடுக்க வேண்டும்!
பெங்களூர் — ப. மூர்த்தி

● மே தின சிந்தனைகள் படித்தேன். தாம் சொல்வதைச் செயலில் கடைபிடிக்கும் ஒரே தொழிலதிபர் ஈஸ்வரன். என் மானசீக குரு.
''தொழிலாளி இல்லாமல் முதலாளி ஏது? அவர்களை வேலைக்கு அமர்த்தியதால் நானே என்னை வேலையில் அமர்த்திக் கொண்டிருக்கிறேன்!''—என்போன்ற சிறு தொழில் இயக்குனர்கள் மனத்தில் எழுதிக் கொள்ள வேண்டிய கருத்து.
சென்னை — கே. எஸ். சங்கரன்

● 26-4-81 இதழ் வட்ட மேஜையில் திரு சுப்பராமன் பிப்ரவரி மாதத்தில் 30 நாட்கள் என்பதற்கு ஆதாரம் இல்லை என்று கூறியிருந்தார். ஆதாரம் இருக்கிறது: Life Time Speaker Encyclopedia, AD 2000 வருஷத்துக்கு பிப்ரவரி மாதத்துக்கு 30 நாட்கள் உண்டு என்கிறது.
சென்னை-16 — கே. வைத்தியநாதன்

● ஒரேமாதிரியான சாயலைக்கொண்ட சரித்திர நாவல்கள் பல படித்த எனக்கு 'சுவர்ண முகி' முற்றிலும் மாறுபட்டுத் தென்படுகிறது. வித்தியாசமான தொடரை வழங்கும் ஸ்ரீ வேணுகோபாலனை என்னவென்று பாராட்டுவது!
மே. கி. புதூர் — ஆர். கே. லிங்கேசன்

Printed by V. Murali and Published by V. Vaidyanathan on behalf of Messrs Bharathan Publications Private Ltd, at the Bharathan Press, Race Course Road Guindy, Madras-600 032. (Phone: 431543) Editor: K. Rajendran




கொசுக்களைத் 'தலை தெறிக்க' ஓடவைக்கும் டார்டாய்ஸ் கொசு வர்த்திச் சுருள்.




நல்லதைச் செய்வீர்..........வாங்குவீர் டார்டாய்ஸ் கொசு வர்த்திச் சுருள்




கொசுத் தடை இன்ஷூரன்ஸ் டார்டாய்ஸ் கொசு வர்த்திச் சுருள்

கொளுத்துவீர்
டார்டாய்ஸ்-விரட்டுவீர்
கொசுக்களை!

**டார்டாய்ஸ்** கொசு
வர்த்திச் சுருளினல்.



தயாரிப்பாளர்:
பாம்பே கெமிகல்ஸ் ப்ரைவேட் லிமிடெட்
...போர்ட், பம்பாய்-400 023. ...போன்: 273831